Regd. No. M. 4392



Edited, printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.



# சந்தோஷச் செய்தி!

அடுத்த இதழ்

## "கல்கி"

9உ ஞாயிற்றுக்கிழமை வெளியாகிறது.



8உ சனிக்கிழமை யன்று
எல்லா இடங்களிலும் கிடைக்கும்.



இந்த ஏப்ரல் முதல்

## "கல்கி"

வாரப் பத்திரிகையாக வெளி வருகிறது.



| | | |
|---|---|---|
| வருஷ சந்தா | ரூ. | 13—0—0 |
| 6 மாத சந்தா | ரூ. | 6—8—0 |
| தனிப் பிரதி | அணா | 0—4—0 |

மானேஜர்
கல்கி காரியாலயம்
சென்னை




# எந்த நல்ல சந்தர்ப்பத்திற்கும்

சிநேகிதர்களின் கூட்டுறவு காலங்களில் டெனுர் சிகரெட்டு உங்களெல்லாருக்கும் ஆனந்தத்தை அளிக்கும். டெனுர் சிகரெட்டின் நறுமணத்தை சந்தோஷத்துடன் இக் காலங்களில் நீங்கள் அனுபவிப்பீர்கள். உங்களில் மெல்லிய தொண்டையுடையவர்கள் இதையே விரும்புவார்கள். உத்தரவாதமுள்ள 100% பொறுக்கின வர்ஜீனியா புகையிலேதான் டெனுர்ஸ் செய்யப்படுகிறது. சுகம் நிறைந்த இந்த சிகரெட்டை நீங்கள் வாங்கி உங்கள் சிநேகிதர்களுடன் அனுபவித்துப் பாருங்கள்.

**tenor**

**டி லக்ஸ் டெனுர் சிகரெட்டு**
**ஜேம்ஸ் கார்ல்டன் லிட்., லண்டன்**

**is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD., LONDON. EASTERN LICENCEES. POST BOX NO. 9029, CALCUTTA

“சுயமாக வெளுக்கும் நுரையின்” இரகசியம் என்ன?

ஸன்லைட் சோப் காய்ச்சும் மற்றொருவன் சொல்லுகிறான் . . .

“‘சுயசக்தி’யே சுயமாக வெளுக்கும் நுரையின் இரகசியம். இந்த சக்திதான் ஆடைகளி லிருந்து தானாகவே அழுக்கைப் போக்க உதவுகிறது. சுய சக்தி வாய்ந்த சோப்பானது அழுக்கைத் தொட்டவுடன் அதைப் பற்றிக் கொள்ளுகிறது. ஆடைகளை ஸன்லைட் சோப்பின் நுரையில் நனைத்துப் பிறகு தண்ணீரில் அலசினவுடன் நுரையோடு அழுக்கும் போய்விடுகிறது.”




# ஸன்லைட் சோப்

சுயமாக வெளுக்கும் நுரை உடையது

S. 66-33 TM

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு

# படித்துப் பார்!

## இதுவும் ஒரு பிரகிருதி

[ஆசிரியர் : நாடோடி ; பிரசுரம் : நாடோடி, தியாகராஜநகர், சென்னை ; விலை ரூ. 2-8-0]

உலகில் எத்தனையோவிதப் பிரகிருதிகள் உண்டு. அவர்களில் 'நாடோடி'யும் ஒரு பிரகிருதிதான். நம்மை இன்னொருவர் வைத விஷயத்தை எவ்வளவு உற்சாகமாக அந்தப் பிரகிருதி வெளியிடுகிறார் பாருங்கள் :—

"'மடையன், தடியன், மூடன், முட்டாள், புத்தியில்லாதவன், மூளையில்லாதவன், அறிவில்லாதவன், துப்பில்லாதவன்' என்று என்னைப் பார்த்து மிகவும் கோபமாகச் சொன்னார் பயங்கராச்சாரியார்......"

பயங்கராச்சாரியாரின் பட்டவர்த்தனத்தை எண்ணி நாம் பயங்கரப் பட்டுக் கொண்டிருக்கும் போதே நம்மை ஏமாற்றிப் பட்டை நாமத்தைக் குழைத்துப் போட்டுவிடுகிறார் ஆசிரியர் நாடோடி. மேலே அவர் சொல்லுவதாவது :—

"நான் திடுக்கிட்டு நின்றேன். அதைப் பார்த்த பயங்கராச்சாரியார், 'வாங்கோ, ஸார்! வாங்கோ! உங்களை ஒன்றும் சொல்லவில்லை, ஸார்! இந்த வீட்டுக்காரன் இருக்கிறான் பாருங்கள், அவனைத்தான் சொல்லிக் கொண்டிருக்கிறேன்......' என்று கையை நீட்டினார்."

இவ்விதமாக நமக்கு ஆசை காட்டி மோசம் செய்யும் இந்த நாடோடிப் பிரகிருதி ஓர் அதிசயப் பிரகிருதிதான். அறிஞர் டி. கே. சி. அவர்கள் சொல்லுவதுபோல, இவர் வௌவாலைப்போல் தலைகீழாகத் தொங்கிக் கொண்டு தினசரி வாழ்க்கைச் சம்பவங்களையெல்லாம் தலைகீழ் நோக்குடன் பார்க்கிறார். அப்போது அவர் கண்ணுக்குத் தோன்றுகிறபடி வாழ்க்கைச் சம்பவங்களை விவரித்து நம்மைச் சிரிப்பாய்ச் சிரிக்க அடிக்கிறார்.

தமிழ் நாட்டில் பிறந்து தமிழ் படிக்கத் தெரிந்தவர்கள் 'நாடோடி'யின் நூல்களைப் படித்துச் சிரித்திராவிட்டால், அப்படிப்பட்டவர்களையும் அதிசயப் பிரகிருதிகள் என்றே சொல்ல வேண்டும்!

## "செட்டிநாடு" தமிழிசை மலர்

அபாரம், அற்புதம், ஆனந்தம், அமர்க்களம், பிரமாதம், பிரம்மாண்டம்; — மேலும் என்ன சொல்வது என்று திகைக்க அடிக்கும் படியாக இந்த மலர் வெளி வந்திருக்கிறது. "செட்டி நாடு" பத்திரிகைக்கும், தமிழிசைக்கும், தமிழ் நாட்டுக்குமே பெருமை தரும் மலர். தமிழிசை இயக்கத்தைப் பற்றிய சகல விவரங்களும், வரலாறுகளும் அடங்கியிருக்கின்றன. தமிழிசை இயக்கத்தில் ஈடுபட்டவர்கள், தமிழ்ப் பாட்டுப் பாடும் பாடகர்கள் படங்கள். இன்னும் தமிழிசை இயக்கத்துக்காக எப்போதாவது ஏதாவது பணி செய்தவர்கள் அவ்வளவு பேருடைய படங்களும் இந்த மலரை அழகு செய்து, தங்களையும் அழகுபடுத்திக் கொள்கின்றன. இந்த வருஷம் வெளியான விசேஷ மலர்கள் எல்லாவற்றிலும் அளவில் பெரியது. ஆனால் விலை இரண்டு ரூபாய்தான். விலாசம்: "செட்டி நாடு" காரியாலயம், காரைக்குடி.

## பாசம் (சிறு கதைகள்)

[ஆசிரியர் : சங்கரராம் ; பிரசுரம் : ஏ. என். பூர்ணா கம்பெனி, தேனாம்பேட்டை ; விலை ரூ. 2—8—0.]

தமிழ் நாட்டிலுள்ள சிறந்த சிறு கதை எழுத்தாளரில் ஸ்ரீ "சங்கர ராம்" ஒருவர். அவருடைய கதைகள் பெரும்பாலும் தமிழ் மக்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுவனவா யிருக்கும். அத்தகைய அழகிய கதைகள் பதினொன்று இந்த நூலில் அடங்கி யிருக்கின்றன.

"சங்கர ராமி"ன் ஜீவனுள்ள தமிழ் நடைக்கு ஓர் உதாரணம் :—"வீரம்பட்டிக் கங்காணியின் சங்கதியை யோசித்துப் பார்த்தால் இவ்வுலகில் குறை யில்லாத மனிதன் ஒருவன்கூட இருக்க மாட்டான் போலிருக்கிறது. வயிறாரச் சோறு கிடைத்தால் போதுமென்று கண்டிக்கு ஓடிப் போன பேர் வழிக்கு லட்ச ரூபாய் ஆஸ்தி கிடைத்தால் போதாதோ? ஊஹூம், திருப்தியேயில்லை!..."

இதைப் படித்த பின் வீரம்பட்டிக் கங்காணியின் முழுக் கதையையும் தெரிந்து கொள்ளாமல் நமக்குத் தூக்கம் பிடிக்குமா?

## அற்புத ரஸம்

சில அற்புதமான தமிழ்க் கவிதைகளை எடுத்துக்கொண்டு "அற்புத ரஸம்" இன்னதென்பதை ஸ்ரீ டி. கே. சிதம்பரநாதர் அற்புதமாக விளக்கி யிருக்கிறார்.

விலை அணா 6. பிரசுரம்: புது மலர் நிலையம், கோயமுத்தூர்.

---

## தலைவலி!



அம்மா :—நன்னாயிருக்கு! நேத்திக்கு ஒரு பாட்டிலை உடைச்சாச்சு! இன்னிக்கி இந்த அமிர்தாஞ்சனம் பாட்டிலுக்கும் தலையை வலிக்கிறாப்போலே இருக்கு!

“சௌக்கியர்தான். இனிமேல் நீயும் சௌக்கியமாயிருக்கலாம்” என்றான் அவன்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. “என்ன ? ஏன் அப்படிச் சொல்கிறாய் ?” என்றேன்.

“அதைப்பற்றி உனக்குக் கடிதம் எழுதியிருக்கிறேன். இன்று வரும்” என்றான் அவன்.

இந்தச் சமயத்தில் சித்தப்பா அவனைக் கூப்பிட்டனுப்பினார் — பெண்ணைப் பார்ப்பதற்காக. அவனும் “இதோ வந்துவிடுகிறேன்” என்று என்னிடம் சொல்லிவிட்டுச் சென்றான். நானும் அவனைப் பின் தொடர்ந்து சென்றேன்.

வீட்டுக் கூடத்தின் ஒரு மூலையில் சோகமே உருவாய் நின்றுகொண்டிருந்தாள் நீலா. அந்த நிலையில் அவளைப் பார்க்க எனக்குப் பரிதாபமாயிருந்தது. அவள் குறிப்பை ஒருவாறு அறிந்து கொண்டவன் போல், “என்னைக் கல்யாணம் செய்து கொள்ள உனக்குச் சம்மதமில்லையல்லவா?” என்று கேட்டான் சுந்தர்.

“மன்னிக்க வேண்டும். ஏற்கெனவே என் மனம் வேறு ஒருவரை நாடிவிட்டது” என்றாள் அவள். இதைக் கேட்டதும் சித்தப்பா கண்களில் தீப்பொறி பறக்க, “யாரை ?” என்று கர்ஜித்தார்.

“அத்தானைத்தான் !” என்றாள் நீலா.

“இந்தச் சாப்பாட்டு ராமனையா ?” என்று என்னைச் சுட்டிக் கேட்டார் சித்தப்பா.

“ஆமாம், மாமா !” என்றாள் நீலா அப்பொழுதும் அடக்கமாக.

“அட ! உன்னை வீட்டில் வைத்துக் கொண்டா என்னை வரனைத் தேடிப் பிடித்தார் ?” என்றான் ‘சுந்தர்’ ஆச்சரியத்துடன்.

“ஆமாம், நான் வேலையில்லாமல் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கிறேனே, இல்லையோ? அதனால் அவளும் ஏன் எனக்கு வாழ்க்கைப் பட்டு என்னுடன் கஷ்டப்படவேண்டும் என்று சித்தப்பா நினைத்தார்” என்றேன்.

“இதெல்லாம் வாழ்க்கையில் சகஜந் தானே! எனக்கு மட்டும் என்றைக்கும் வேலையிருக்குமென்று என்ன நிச்சயம்? ஆனால் இனிமேல் உனக்கு ஒன்றும் கஷ்டமில்லை. எங்கள் பத்திரிகை இம்மாதத்திலிருந்து வாரம் இருமுறையாக ஆகிறது. இன்னொரு ‘ஆர்ட்டிஸ்ட்’ தேவை என்றார்கள். நான் உன்னைப் பற்றிச் சொன்னேன். சரி என்று ஒப்புக்கொண்டார்கள். எடுத்ததும் சம்பளம் நூறு ரூபாய். கடிதம் இன்று வரும் என்றேனே, அந்தக் கடிதத்தில் இதைத்தான் எழுதியிருக்கிறேன். ஆகவே, எனக்குக் கல்யாணம் ஆவதற்குள், நீயும் இந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு என்னுடன் டில்லிக்குக் கிளம்பத் தயாராயிரு” என்று சொல்லிச் சிரித்தான் சுந்தர்.

அவன் சிரித்ததைப் பார்த்து எனது சித்தப்பாவும் சிரித்தார்.

நான் நீலாவைப் பார்த்தேன். ஆனால் அவளுக்கு ஏனோ அப்பொழுது என்னைப் பார்ப்பதற்கு என்றுமில்லாத வெட்கம் வந்துவிட்டது !

---

# போட்டுக் கொண்டால் !



பாட்டி :—ஏண்டி, சொல்லைச் சொல்லக் காதிலேயே போட்டுக் கொள்ள மாட்டே னென்கிறயே ?




பேத்தி :—இந்தா பாட்டி, இதோ காதிலே போட்டுண்டுட்டேன் ! இனிமே நச்சுப் பண்ண மாட்டயே ?

அவளிடமிருந்து எப்படியாவது பிடுங்கிக் கொள்ள வேண்டுமென்றிருந்தது.

நல்ல வேளையாகப் பக்கத்து வீட்டில் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகும் பெண்ணுக்கு நலங்கு வைக்கிறார்கள் என்பதற்காக எனது சித்தி சென்றுவிட்டாள். சித்தப்பாவும் அதுவரை வேலையிலிருந்து வீட்டுக்கு வரவில்லை.

இதுதான் சமயம் என்று நான் மெள்ள அவளது அறையின் பக்கம் சென்று எட்டிப் பார்த்தேன். அப்பொழுது அந்தப் படத்தை வைத்துக் கொண்டு அவள் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"நீலா!" என்றேன்.

திரும்பிப் பார்த்தாள். "இந்தப் படத்தில் இருப்பவர்கள் யார்?" என்று என்னைக் கேட்டாள்.

"ஏன், தெரியவில்லையா?"

"தெரிகிறது. நீங்கள்தான் சொல்லுங்களேன்!"

"நீயும் நானும்தான்."

"இம்மாதிரி நடக்குமா?"

"நடக்காது!"

"ஏன் நடக்காது?"

"சித்தப்பா சொல்வதை நீ கேட்டதில்லையா?"

"என்ன சொல்கிறார்?"

"என்னுடைய லட்சணத்துக்கு உன்னைக் கல்யாணம் செய்துவைக்க வேண்டியதுதான் பாக்கி என்கிறார்!"

"ஆமாம், உங்களைக் கண்டால் என் மாமாவுக்கு வெறுப்பா யிருக்கிறது?"

"இது தெரியாதா? நன்றாய்ச் சம்பாதிக்காததுதான்!"

"உங்கள் அப்பாவா யிருந்தால் அப்படி யிருப்பாரா? நான் துர்ப்பாக்கியசாலி!" என்றாள் அவள் சோகக் குரலில்.

"நானும் துர்ப்பாக்கியசாலிதான்!" என்று சொல்லிக் கொண்டே நான் அவளுடைய கையிலிருந்த படத்தைப் பிடுங்கப் போனேன்.

"வேண்டாம், இது என்னிடமே இருக்கட்டும்" என்று சொல்லிக் கொண்டே அவள் அந்தப் படத்துடன் ஓட எத்தனித்தாள். நான் விடவில்லை. வேறு வழியின்றிப் பின்னலைப் பிடித்துக்கொண்டேன். இந்தச் சமயத்தில் யாரோ தெரு வாயிலில் வருவது போலிருந்தது. திடுக்கிட்டுத் திடீரென்று பிடித்துக் கொண்டிருந்த பின்னலை விட்டு விட்டேன். 'இந்தப் பூனையும் அந்தப் பாலைக் குடிக்குமா' என்பது போன்று, நான் மெள்ள எனது அறைக்கு வந்து விட்டேன். நான் பின்னலை விட்ட வேகத்தில் அவள் விழுந்துவிட்டாள். அப்பொழுது அங்கே வந்த சித்தி, "ஐயோ, மகளே!" என்று சொல்லி அவளை வாரி எடுத்து அணைத்துக் கொண்டாள்.

"புடவை தடுக்கி விழுந்து விட்டேன், மாமி!" என்று சொல்லிக் கொண்டே, அவள் என்னைக் கடைக் கண்ணால் பார்த்தாள். நான் அப்பொழுது திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்தேன்.

## 3

இந்தச் சம்பவம் நடந்த சில நாட்களுக்குப் பிறகு, சித்தப்பா நான் வெகு நாட்களாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஒரு சேதியைக் கொண்டு வந்தார். அன்று அவர் வேலையிலிருந்து வரும்போதே என்றுமில்லாத உற்சாகத்துடன் சித்தியைக் கூப்பிட்டு, "அடியே! நீலா அதிர்ஷ்டசாலிதான். அவளுக்கு நல்ல இடத்தில் வரன் கிடைத்துவிட்டது. பிள்ளையாண்டானின் பெயர் சுந்தர ராகவனாம். மாதம் இருநூறு ரூபாய் சம்பாதிக்கிறானாம். வரதட்சிணை ஒரு தம்பிடிகூட வாங்கக்கூடாது என்கிறானாம். ஆனால் பெண்ணை நேரில் கண்டு, "உனக்கு என்னைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதந்தானா?" என்று ஒரு வார்த்தை கேட்டு விட்டுத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சம்மதிப்பானாம். நாளைக்கு அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் நம் வீட்டுக்குப் பெண்ணைப் பார்க்க வருகிறார்கள்" என்றார்.

"நல்ல வரனைத் தேடிக்கொண்டு வந்து விட்டீர்கள்! ஏன், வீட்டிலேயே இருக்கும் வரனுக்கு என்ன?" என்று எரிந்து விழுந்தாள் சித்தி.

"அதெல்லாம் எனக்குத் தெரியும். நீ பேசாமல் வேலையைப் போய்ப் பார்!" என்றார் சித்தப்பா.

* * *

மறு நாள் பிள்ளை வீட்டார் வந்தார்கள். மாப்பிள்ளையைக் கண்டதும், எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. அவன் வேறு யாருமில்லை. எனது பள்ளிக்கூடத்து நண்பனான 'சுந்தர்' என்று புனை பெயர் பூண்ட சுந்தரராகவன்தான்.

"சௌக்கியமா?" என்று சம்பிரதாயப்படி விசாரித்தேன்,

# சித்தப்பா

"விந்தன்"

அன்று மாலை நான் வீட்டிற்குள் நுழையும்போது, அவளைத் தவிர வேறு ஒருவரும் அந்த வீட்டில் இல்லை. அப்போதுதான் அவள் கூடத்திலிருந்த கண்ணாடியின் முன் நின்று கொண்டு, முகத்தில் பௌடரைப் பூசிக் கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் அவளைப் பார்க்கும்போது, சமையலறைக்குத் திருடித் தின்பதற்காகச் சென்ற பூனை, சாம்பலைப் பட்டதும் படாததுமாகப் பூசிக்கொண்டு எதிரே வருவது போலிருந்தது. அதைப் பார்த்ததும், எனக்கு என்னையும் அறியாமல் சிரிப்பு வந்து விட்டது. எனது சிரிப்பின் ஒலியைக் கேட்டதும், அவள் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அப்பொழுது அவள் முகத்தில் தோன்றிய நாணத்தின் சாயல் எனது இருதயத்திற்கு ஒருவித இதத்தைக் கொடுத்தது. அடுத்த கணமே, அவள் முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டு தன் அறைக்குள் ஓடி ஒளிந்தாள்!

*　　　*　　　*

அவள் வேறு யாருமில்லை; எனது அத்தை மகள்தான். பெயர் நீலா. நான் எப்படி தாய் தந்தையற்ற அனாதையோ, அதே மாதிரி அவளும் தாய் தந்தையற்ற அனாதை. இருவரும் எனது சித்தப்பாவின் பாதுகாப்பில்தான் இருந்தோம். அவர் எனது அப்பாவுடன் பிறந்தவர்தான். என்றாலும் என்னைக் கண்டால் அவருக்குப் பிடிப்பதில்லை. ஆனால் சித்தி மட்டும் எங்களிடம் கூடிய வரையில் விசுவாசத்துடனே நடந்து கொண்டாள்.

என்றைக்காவது ஒரு நாள் நான் இரவு வெகு நேரங் கழித்து வருவேன். இம்மாதிரி சமயங்களில் எனக்காக என் சித்தி காத்திருக்க முடியாது. அவளை முதலில் சோற்றில் தண்ணீரைக் கொட்டி விட்டு வந்து படுத்துக் கொள்ளச் சொல்வார் சித்தப்பா. அத்துடன் நின்றாலாவது எவ்வளவோ நன்றாயிருக்குமே! அதுவும் கிடையாது. தெருக் கதவை வேறு சாத்தித் தாளிட்டு விடுவார். நான் வந்தால் படுத்துக் கொள்வதற்கு வேறு எந்த வீட்டுத் திண்ணையையாவது தேடிக் கொள்ள வேண்டியதுதான். இந்த லட்சணத்தில்தான் அவள் என்னைக் காதலித்தாள்!

அப்பொழுது நான் மேற்கொண்டிருந்த தொழிலோ, பத்திரிகையில் வெளியாகும் கதைகளுக்குப் படம் போடுவது. நான் ஒன்றும் அப்படிப் பிரமாதமான ஓவியக்காரனுமல்ல; இளம் ஓவியக்காரன். ஓரிரண்டு பத்திரிகைகளில் இடம் கிடைப்பதே கஷ்டமாயிருந்தது. அதற்குக் கூட வழி காட்டியவன் எனது பள்ளிக்கூடத்து நண்பன் 'சுந்தர்'தான். அவன் டெல்லியில் பிரசித்தி பெற்ற ஓர் ஆங்கில வாரப் பத்திரிகையில் மாதம் இருநூறு ரூபாய் சம்பளமாகப் பெறும் பேர்போன ஓவியக்காரன். அவனும் தன்னால் ஆனமட்டும் எனக்கு எங்கேயாவது மாதச் சம்பளத்தில் வேலை தேடிக் கொடுக்க வேண்டும் என்று முயன்று வந்தான்.

அதிகமாய்ப் போனால் மாதம் பத்துப் பதினைந்து ரூபாய்க்கு மேல் எனக்கு வரும்படி கிட்டாது. இது அப்படியே எனது சித்தப்பாவுக்கு அர்ப்பணமானாலும் அவருக்குக் கொஞ்சம் திருப்தியாயிருக்கும். அதற்குக் குறுக்கே இருந்தது எனது ஒரே ஒரு தம்பியின் படிப்பு. "இப்படியிருந்தால் எந்தச் சித்தப்பாவுக்குத்தான் அதிருப்தியில்லாமலிருக்கும்?" என்று என்னை நானே தேற்றிக் கொள்வேன்.

## 2

ஒரு நாள் என்னவோ அவளும் நானும் மணக் கோலத்தில் இருப்பது போன்று படம் போட்டுப் பார்க்க வேண்டுமென்று எனக்கு ஆசை உண்டாயிற்று. போட்டுப் பார்த்தேன்; வெகு நன்றாய் அமைந்து விட்டது. எனது அறையில் உட்கார்ந்து கொண்டே அந்தப் படத்தை இப்படியும் அப்படியுமாக வைத்துப் பைத்தியக்காரன் மாதிரி பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த சமயத்தில் அடுப்பங்கரையில் இருந்து கொண்டே எனது சித்தி என்னைக் கூப்பிடவே, நான் அந்தப் படத்தை அப்படியே மேஜை மீது வைத்துவிட்டு எழுந்து சென்றேன். நான் திரும்பி வருவதற்குள், அவள் அந்தப் படத்தை எடுத்துக் கொண்டு போய்விட்டாள். எனக்கு அந்தப் படத்தை

# பலசரக்கு



**45** கோடி மக்கள் வாழும் சீனாவில் நூறே நூறு குடும்பப் பெயர்கள் தான் இருக்கின்றனவாம். இதனால் பெயர்க் குழப்பங்கள் அதிகம் ஏற்படுகின்றனவாம். இதைத் தவிர பூனை என்று குடும்பப் பெயர் உள்ள சீனன் எலி என்று குடும்பப் பெயர் உள்ள சீனக்காரியையோ, நெருப்பு என்று குடும்பப் பெயர் உள்ள சீனன் தண்ணீர் என்று குடும்பப் பெயர் உள்ள சீனக்காரியையோ கல்யாணம் பண்ணிக் கொள்ளும்படி நேர்ந்தால் துரதிர்ஷ்டமாகக் கருதப்படுகிறது. இதற்குப் பதில் ஏரி, தண்ணீர் அல்லது செருப்பு, கால் என்று இப்படி தம்பதிகளின் குடும்பப் பெயர்கள் இருந்தால் அது அதிர்ஷ்டமாகக் கருதப்படுகிறது.





**பி**ரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில் ஒரு தடவை, பிரசங்கம் செய்வதற்காக டாக்ஸியில் ஏறிக்கொண்டு ரேடியோ நிலையத்துக்குச் சென்றார். டாக்ஸி டிரைவருக்கு அவர்தான் சர்ச்சில் என்பது தெரியாது. டாக்ஸி ரேடியோ நிலையத்தில் போய் நின்றதும் சர்ச்சில் கீழே இறங்கி டிரைவரைப் பார்த்து "நான் உள்ளே சென்று அரை மணியில் திரும்பி வந்து விடுகிறேன். அது வரை உன்னால் காத்திருக்க முடியுமா?" என்று கேட்டார்.

அதற்கு அந்த டிரைவர் "முடியாது; இன்றைக்கு சர்ச்சிலின் ரேடியோப் பிரசங்கம் இருக்கிறது. அதைக் கேட்கப் போக வேண்டும்" என்றான்.

சர்ச்சில் ஆச்சரியப்பட்டார். மேலும் அவனைச் சோதனை செய்ய எண்ணி "உனக்கு டாக்ஸி வாடகையுடன் ஒரு பவுன் கூட்டித் தருகிறேன். அப்போது காத்திருப்பாயா?" என்று கேட்டார்.

டாக்ஸி டிரைவர், "சரி, காத்திருக்கிறேன்; நீங்கள் போய் வாருங்கள். அந்த சர்ச்சில் என்னத்தைப் பேசிக் கிழித்து விடப் போகிறான்?" என்றான் அலட்சியமாக.

**ட**பிள்யூ. எஸ். கில்பர்ட் ஒரு பிரபல மேனாட்டு ஆசிரியர். அவருடைய கையெழுத்து வேண்டுமென்று வற்புறுத்தி ஒரு சிறு பெண் அவருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள்.

அந்தச் சிறுமிக்கு கில்பர்ட் பின்வருமாறு ஒரு கடிதம் எழுதினார்:

"நான் யாருக்குமே என் கையெழுத்தை அனுப்புவதில்லை. நீ சிறு பெண்ணாயிருப்பதால் உனக்கு இல்லையென்று சொல்ல மனம் வரவில்லை. எதற்கும் பூவா, தலையா போட்டுப் பார்த்து தலை விழுந்தால் அனுப்புவது, பூ விழுந்தால் இல்லை என்று தீர்மானித்தேன். பூதான் விழுந்தது. ஆகையால் உனக்கு என் கையெழுத்தை அனுப்ப முடியாது.

டபிள்யூ. எஸ். கில்பர்ட்."





**லெ**வின்ஸ்கி என்னும் ஒரு ஸோல்ஜர், யுத்த முனையிலிருந்து தன் தாயாருக்கு ஒரு கடிதம் எழுதினான்:

"அம்மா! இங்கே நான் தங்கியுள்ள இடத்தில் இவர்கள் கொடுக்கும் சாப்பாடு ஒரே விஷமாயிருக்கிறது. அதையாவது நிறையக் கொடுத்துத் தொலைக்கிறார்களா, கிடையாது!"





**ஜா**ன் மாரிஸ் என்னும் ஆங்கிலேயர் டோக்கியோ சர்வ கலாசாலையில் புரொபஸராக இருந்தார். ஒரு நாள் ஜப்பானிய உபாத்தியாயர் ஒருவர் அவரிடம் வந்து, ஆங்கிலத்தில், "நேற்று இரவு என் வீடு பற்றிக்கொண்டு, என் மனைவியும், இரண்டு குழந்தைகளும் இறந்துவிட்டனர்" என்றார். அவர் முகத்தில் துக்கக் குறி ஒன்றையும் காணாது ஜான் மாரிஸ் திகைத்துக் கொண்டிருக்கையில் ஜப்பானிய உபாத்தியாயர், "என்ன, வாக்கியம் சரிதானா? அதற்காகத்தான் கேட்டேன்" என்றாராம்!




தாய்மார்களும், தந்தையர்களும் விரும்புவது

# பெரீஸ் பிஸ்கோத்துகள்

ஏன்?

தங்கள் குழந்தைகளை போஷித்து வளர்க்கச் செய்யும் சிறந்த ஆகாரம் என்று அறிந்திருக்கிறார்களென்பதே!

PERRY & COMPANY BISCUIT MANUFACTURERS, USILAMPATTI.



# காலக்ஷேபம்

## எது கடினம்?

மாமா :—ஏண்டா ராமு, பரீக்ஷையில் கேள்விகள் எல்லாம் ரொம்பக் கடினமோ?

ராமு :—கேள்விகள் கடினம் இல்லை, மாமா! ஆனால் விடை எழுதுவதுதான் ரொம்பக் கடினமாயிருந்தது.

—நாகவல்லி.

●

## பெரிய மனிதர்!

வேலைக்காரன்:—உங்களைத் தேடிண்டு யாரோ பெரிய மனிதர் ஒருவர் வந்தார்.

எஜமான் :—உத்தேசம் யார் மாதிரி இருப்பார்?

வேலைக்காரன் :—அதைப் பற்றி திட்டமாக ஒன்றும் சொல்ல முடியாது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அவர் உங்களைப் போல் இல்லை.

—பி. துரைசாமி.

●

## வேற்றுமை

பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர் :—வேற்றுமை எத்தனை விதம்?

பையன் :—நம் நாட்டில் அது எத்தனையோ விதம்; எண்ண முடியாது!

—ஜி. வி. ராகவாச்சாரி.

●

## சரியான பதில்

பிச்சைக்காரன் (ஒரு வீட்டு எஜமானனைப் பார்த்து) :—சாப்பிட்டு ரொம்ப நாள் ஆச்சு! கொஞ்சம் பிச்சை போடுங்கோய்யா!

வீட்டு எஜமானன் :—இங்கே பிச்சை போட்டு ரொம்ப நாளாச்சு; போயிட்டு வாய்யா!

—ஆர். வி. வரதராஜுலு.

## நல்ல வழி

வழிப்போக்கன் (மற்றொருவனைப் பார்த்து) :—அண்ணே, ஆஸ்பத்திரிக்குப் போகும் வழி எது?

மற்றொருவன் :—அதோ வரும் மோட்டாருக்கு எதிரில் போங்கள்; உடனே ஆஸ்பத்திரிக்குப் போகலாம்.

—வி. விசுவநாதன்.

●

## எங்கேயும் போகாது!

ஒருவர் :—ஏன் சுவாமி! நீங்கள் எந்த ஊர்? உங்கள் முகத்தை எங்கேயோ பார்த்தாப்பலே இருக்கே!

மற்றவர் :—நான் இதே ஊர்தான், சுவாமி! என் முகம் என்னை விட்டு வேறு எங்கேயும் போகாது!

—ஐ. எம். ஜஹுருல்லா.

●

## சரியான பதில்

உபாத்தியாயர் :—ஏண்டா, கோபு! பரீக்ஷையில் இவ்வளவு மோசமாக மார்க் வாங்கியிருக்கிறாயே. அமெரிக்காவில் ஜார்ஜ் வாஷிங்டன் உன்னுடைய வயதாக இருக்கும்போது எவ்வளவு



நன்றாகப் படித்து நூற்றுக்கு நூறு வாங்கினான் தெரியுமா?

கோபு :—அது சரிதான் சார்! அவன் உங்கள் வயதாக இருக்கும்போது அமெரிக்காவுக்கே பிரசிடெண்டாக இருந்தானே!

—எஸ். ரகமு.



பார்த்தது. உடனே அதற்குப் பளிச்சென்று ஒரு யோசனை உதயமாயிற்று. அதன்படி அது ஒரு பூனையைத் தேடிப் பிடித்தது. அதனுடன் ஒரு எலியைக் கொண்டு வந்து சேர்த்து, இரண்டையும் ஒற்றுமையாக இருக்கச் செய்தது. அதற்குப் பிறகு அவற்றிற்குச் சில விநோதமான விளையாட்டுகளையும் கற்றுக் கொடுத்தது.

தினந்தோறும் பூனையின் மீது எலியை உட்கார வைத்துக் கொண்டு குரங்கு வீடு வீடாகச் செல்லும். அவற்றைப் பார்க்க ஜனங்களுக்கு ரொம்ப வேடிக்கையாக இருக்கும். ஆனால் அவர்கள் குரங்கின் கையில் காசு ஒன்றும் கொடுப்பதில்லை. அதற்குப் பதிலாகப் பட்டாணி, வாழைப் பழம் முதலியவற்றைக் கொடுத்தார்கள். எப்படிக் கொடுத்தால் என்ன? பூனை, எலியுடன் குரங்கு கிடைத்ததைப் பகிர்ந்து கொண்டு சந்தோஷமாகக் காலந் தள்ளி வந்தது.

இந்தக் குரங்கு கோஷ்டியின் புகழ் எங்கும் பரவ ஆரம்பித்தது. இது குருவிக்காரன் காதில் விழவே, அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "ஐயோ! என் முட்டாள்தனத்தால் அந்தப் புத்திசாலிக் குரங்கை இழந்து விட்டேனே!" என்று அவன் மிகவும் வருந்தினான்.

குரங்கு தன் சகாக்களுடன் ஊர் ஊராகத் திக் விஜயம் செய்துகொண்டு வந்தபோது, ஒரு சாலை ஓரத்தில் குருவிக்காரன் சோர்ந்து படுத்திருந்ததைப் பார்த்தது.

ஆமாம்; குருவிக்காரன் அப்பொழுது பசி தாங்காமல்தான் படுத்திருந்தான். குரங்கு அவனை விட்டுப் பிரிந்ததிலிருந்தே அவனுக்கு வருமானம் கிடைப்பதில்லை. பாதி நாள் அவன் பட்டினிதான். அந்தப் பரிதாப நிலையில் அவனைப் பார்த்ததும் குரங்கின் மனம் இளகிவிட்டது. உடனே அது அருகிலிருந்த குளத்தங் கரைக்கு ஓடி, ஒரு குவளையில் தண்ணீர் கொண்டு வந்து அவன் முகத்தில் தெளித்தது. அப்பொழுது குளிர்ந்த காற்று வீசவே, குருவிக்காரன் மூர்ச்சை தெளிந்து எழுந்தான். அதைக் கண்டு சந்தோஷமடைந்த குரங்கு, தன்னிடமிருந்த ஆகாரத்தை எடுத்து அவன் வாயில் ஊட்டிற்று. வாயில்லா மிருகத்தின் எதிர்பாராத உதவிக்கு எப்படி நன்றி செலுத்துவதென்று அவனுக்குத் தெரியவில்லை. கண்களில் நீர் பெருக அவன் குரங்கை அப்படியே ஆலிங்கனம் செய்து கொண்டான்.

அந்த நிமிஷத்திலேயே குரங்கும் குருவிக்காரனும் நடந்ததை மறந்து பழையபடி நண்பர்களாகி விட்டனர்.

இப்பொழுது குருவிக்காரன் குரங்கின் கோஷ்டியுடன் ஊர் ஊராகச் சுற்றி வித்தை காட்டி வருவதை நீங்களும் பார்க்கிறீர்களல்லவா?





# குருவிக்காரன்

அம்பி

ஒரு ஊரில் ஒரு குருவிக்காரன் இருந்தான். அவன் அடிக்கடி காட்டிற்கு வேட்டையாடச் செல்வான். ஏதாவது குருவிகள் கிடைத்தால் அவற்றை விற்று ஜீவனம் செய்வான். இல்லாவிட்டால் அவன் வளர்க்கும் குரங்கைக் கூட்டிக் கொண்டு போய் வீடுதோறும் ஆட வைத்துக் காசு சம்பாதிப்பான்.

அந்தக் குரங்குக்கு அவன் சாப்பிட்டு மிஞ்சிய சோற்றைத் தவிர வேறு எதுவும் தின்பதற்கு வாங்கிக் கொடுப்பதில்லை. அதை ஆட வைத்துச் சம்பாதிக்கும் பணத்தையெல்லாம் அந்தக் குருவிக்காரன் அப்படியே குடித்துத் தீர்த்து விடுவான்.

ஒரு நாள் குருவிக்காரன் ஒரு சீப்பு வாழைப் பழத்தை வாங்கினான். அவற்றை ஒவ்வொன்றாக அவன் உரித்துத் தின்னும்போது, குரங்கு வைத்த கண் வாங்காமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தது. என்றாலும், அவன் அதற்கு ஒரு பழம்கூடக் கொடுக்கவில்லை. எல்லாவற்றையும் அவனே தின்றுவிட்டான். அதைப் பார்க்கக் குரங்குக்குக் கோபம் கோபமாக வந்தது. ஆகவே, அது அவனை விட்டு எப்படியாவது பிரிந்துவிட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டது.

ஒரு சமயம் வேட்டைக்குச் சென்ற குருவிக்காரனுக்குக் குருவிகள் ஏராளமாகக் கிடைத்தன. மறுநாள் சந்தைக்குக் கொண்டு போய் விற்பதற்காக அவன் அவற்றையெல்லாம் ஒரு வலைக் கூடையில் போட்டுப் பத்திரமாக அடைத்து வைத்திருந்தான். தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள அது தான் தக்க சமயம் என்று நினைத்த குரங்கு, கூடையைத் திறந்து குருவிகளையெல்லாம் வெளியே விட்டு விட்டது. அதற்குப் பிறகு அது அங்கே நிற்குமா, என்ன? அது குருவிகள் பறந்து செல்வதைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே ஒரே ஓட்டமாய் ஓடி அடுத்த ஊரை அடைந்தது.

குருவிக்காரனைப் போல் தானும் ஜனங்களிடம் ஏதாவது வித்தை காட்டிப் பணம் சம்பாதிக்க வேண்டுமென்று குரங்கு நினைத்தது. "என்ன செய்தால் ஜனங்களுக்கு வேடிக்கையாக இருக்கும்?" என்று அது யோசித்துப்

இது என்று தூதர்கள் நீட்டினார்கள். நிருபம் வந்தது என்ற மாத்திரத்தில் பரதனுக்கு என்றுமில்லாத ஆனந்தம் மேலிடுகிறது. இயல்புதானே? தந்தையை வாழ்த்திக் கைகூப்பி வணங்குகிறான்.

என்று கூறலும்
ஏத்தி இறைஞ்சினான்
பொன்தி ணிந்த
பொருவில் தடக்கையால்,—
நின்று வாங்கி
உருகிய நெஞ்சினன்
தூன்று நாண்மலர்ச்
சென்னியில்ச் சூடினான்.

[என்று கூறலும் ஏத்தி இறைஞ்சினான்: நிருபம் இதோ இருக்கிறது என்று தூதுவர் சொன்னதும் தந்தையை வாழ்த்தி வணங்கினான்; பொன் திணிந்த பொருவில்த் தடக்கையால்: பொன்னாபரணங்கள் நிறைய அணிந்து தனி அழகு வாய்ந்த கைகளால் வாங்கி. தூன்று நாண்மலர் சென்னியில்ச் சூடினான்: பூமாலை அணிந்த தலையில் அந்தத் திருமுகத்தைச் சூடினான்.]

மங்களகரத்தைக் குறிக்கும்படியாகச் சந்தனம் கலந்த மண்ணை ஓலையின்மேல் ஒட்டி முத்திரை இட்டிருந்தது. அந்த முத்திரையை நீக்கி ஓலையை நிமிர்ந்து, எழுதியிருந்த விஷயத்தை வாசித்துப் பார்த்தான். தூதர்களுக்கு ஏராளமாக வெகுமதியைக் கொடுத்தான்.

ராமனது எண்ணமே பரதன் மனசில் மேலிடுகிறது. அவனைப் பார்க்கப் போகிறோம் என்கிற ஆனந்தத்தினால் முகம் மலர்ச்சி அடைகிறது. தேகம் புளகிக்கிறது.

வாணி லாநகை
தோன்ற, மயிர்ப்புறம்
பூண, வானுயர்
காதலில்ப் பொங்கினான்,
தாள்நி னைந்(து)அலர்
தூவினன், தம்முனைக்
காண லாம்எனும்
ஆசை கடாவவே.

[வாள் நிலா நகை தோன்ற: வெண்மையான பிரகாசத்தோடு கூடிய பல் தெரியும்படியாக, நகைத்தவனாய்; மயிர்ப்புறம் பூண: தேகம் புளகிக்க; வான் உயர் காதலில்ப் பொங்கினான்: அளவிட முடியாத ஆனந்தத்துக்கு உள்ளாயினான்; தாள் நினைந்து அலர் தூவினன்: அயோத்திக்குப் போய் ராமனது பாதத்தை அர்ச்சிக்க வேண்டும் என்கிற ஆசையினால் அந்த இடத்திலேயே அந்தப் பாதங்களைத் தியானித்துப் புஷ்பங் கொண்டு அர்ச்சிக்கிறான்; தம்முனை: ராமனை; ஆசை கடாவவே — ஆசை தூண்டவே.]

அவசரம் அவசரமாகச் சேனையைப் புறப்படச் சொல்லுகிறான். உள்ளே போய்க் கேகய ராஜனிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்து, தேரை ஒரு கையால் பிடித்தவண்ணமாய்ச் சத்ருக்கனை ஏறச்சொல்லித் தானும் ஏறுகிறான்.

'எழுக சேனை' என்(று)
ஏவினன்; எய்தினன்
தொழுது, கேகயர்
கோமகன் சொல்லொடும்;
தழுவு தேரிடை
தம்பியொ(டு) ஏறினான்,—
பொழுதும் நாளும்
குறித்திலன் போயினான்.

[எய்தினன் தொழுது, கேகயர் கோமகன் சொல்லொடும்: கேகய ராஜன் போய் வா என்று சொல்லிக்கொண்டே பின்னால் வருகிறான். பரதன் அவனைத் தொழுத கையுடனேயே வெளியே வருகிறான். தழுவு தேரிடை: ஒரு கையால்ப் பிடித்த தேரின் மேல்; பொழுதும் நாளும் குறித்திலன் போயினான்: நல்ல நேரமோ நல்ல நாளோ ஒன்றும் கவனியாதபடி போனான்.]

ரயில் மோட்டார் இவைகள் வருவதற்கு முன் நம்மவர் சகுனம் பார்க்கிறது, சூலம் பார்க்கிறது என்றெல்லாம் வைத்துக்கொண்டிருந்தார்கள். மாட்டு வண்டியில் சாவகாசமாக ஏறலாம் அல்லவா? அதனால் சகுனம் பார்த்துத் தாமசம் ஏற்பட்டாலும் கவலை இல்லை. மாட்டை இரண்டு தட்டுத் தட்டினால் போதும் என்பார்கள். அந்த நம்பிக்கைகளை எல்லாம் சிதற அடித்து விட்டன, இந்தக் காலத்து ரயில் மோட்டார்கள்.

"பொழுதும் நாளும்
குறித்திலன் போயினான்"

என்று அவசர பாவத்தைக் கொடுக்க வந்த கம்பர் ஆயிர வருஷத்துக்கு முன்னுள்ளவர் அல்ல. இருபதாவது நூற்றாண்டைச் சேர்ந்தவர்தானோ என்று எண்ணத் தோன்றுகிறது!

கைகேசி சொல்லிய சொல்லேயே கேட்டு வந்ததால் தசரதன் சௌக்கிய மாக இருப்பதாகவே தூதர்கள் எண்ணி வந்தார்கள்; அதனுலேயே 'சௌக்கிய மாக இருக்கிருன்' என்று சொல்லு கிருர்கள். பரதன், திருப்தி அடைந்து, "நல்லது, அண்ணன் ராமன் சௌக்கிய மாக இருக்கிருனு?" என்று கேட்கிருன்.

'வலியன்' என்றவர்
கூற மகிழ்ந்தனன்;
'இலேகொள் பூண்இளங்-
கோன்எம்பி ரான்அவன்
உலேவில் செல்வத்த—
ஞே?' என, 'உண்(டு)' எனத்
தலேயின் ஏந்தினன்
தாழ்நடக் கைகளே.

[வலியன் என்று அவர் கூற மகிழ்ந்தனன்: தசரதன் ஆரோக்கியமாக இருக்கிருன் என்று தூதர்கள் சொல்ல மகிழ்ச்சி அடைந்தான். இனிமேல் வருகிறது கேள்வி. இலே கொள் பூண் இளங்கோன் எம்பிரான் அவன்: சின்னஞ் சிறு பதக்கங்கள் தொங்கவிட்ட தோள் வளேயம் அணிந்த இளவரசனுகிய எங்கள் ராமன்; உலேவு இல் செல்வத்தனே என: யாதொரு குறைவுமில்லாமல் இருக்கிருன் அல்லவா என்று கேட்க; உண்டு என: ஆம், அப்படியேதான் என்று தூதுவர் சொல்ல; தலேயில் ஏந்தினன் தாழ் நடக்கைகளே; கைகளேத் தலேயில் ஏந்தியவனுய்ச் சேவிக்கிருன் பரதன்.]

இந்த விதமாக ஒரே அன்பு மயமாக நின்று ராமனது யோக க்ஷேமத்தை விசாரித்து விட்டு மற்ற உற்ருர் உற வினர் சம்பந்தமாகவும் க்ஷேமம் விசா ரிக்கிருன். எல்லாரும் க்ஷேமந்தான் என்று தூதுவர் சொல்லுகிருர்கள். அதன் பின் தந்தை அனுப்பிய திருமுகம்



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

## 59. நாள் நக்ஷத்திரம் எதற்கு?

**ரா**மன் சீதை லக்ஷ்மணன் ஆகிய மூவரும் அயோத்தியை விட்டுப் புறப்பட்டார்கள் என்பதும் கடைசியாகச் சித்திர கூட பர்வதம் வந்து தங்கினார்கள் என்பதும் நமக்குத் தெரியும்.

இனி நாம் போக வேண்டிய இடம் கேகய நாடு. பரதன் அங்கே போயிருக்கிறான். அயோத்தியில் நடந்த விஷயம் ஒன்றும் அவனுக்குத் தெரியாது.

*  *  *

**த**சரதன், கைகேசிக்கு வரத்தைக் கொடுத்து விட்டு நீயும் பரதனும் எப்படியேனும் தொலைந்து போங்கள் என்று சொல்லி மூர்ச்சையாய்ப் போன விவரத்தைக் கீழே பார்த்தோம். கைகேசி அப்படியே உறங்கி விட்டாள் என்பதையும் பார்த்தோம். விழித்து எழுந்ததும் அவள் தசரதன் சொன்னதாகவே சொல்லித் தூதர்களை அவசரம் அவசரமாய்ப் பரதன் போயிருந்த கேகய நாட்டுக்கு அனுப்பினாள். தூதர்களும் தசரதன் கட்டளை என்று எண்ணியே போகிறார்கள்.



பரதன் இருந்த அரண்மனையை வந்து அடைகிறார்கள் தூதர்கள். காவலாளரிடம் தங்கள் வருகையைத் தெரிவிக்கிறார்கள். காவலாளர்களும் பரதனிடம் போய், உன்னுடைய தந்தை அனுப்பிய தூதுவர் வந்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். "அப்படியா, நானே போய்ப் பார்க்கிறேன்" என்று எழுந்தான் பரதன்.

'தூதர் வந்தனர்
  உந்தைசொல் லோ(டு)'எனக்,
காதல் உந்திக்
  களிக்கின்ற சிந்தையான்,
'போது கென்'எனப்,
  புக்கவர் கைதொழத்
'தீதி லன்கொல்?
  திருமுடி யோன்'என்றான்.

[உந்தை சொல்லோடு என: உன் தந்தையாகிய தசரதன் சொல்லி விட்ட வார்த்தையோடும் வந்துள்ளார்கள் என்று காவலாளர்கள் சொன்ன மாத்திரத்தில்; காதல் உந்தி: அன்பானது உள்ளேயிருந்து தள்ள; களிக்கின்ற சிந்தையான்: ஆனந்தத்தில் திளைத்தவனான பரதன்; போதுகென் என: நானே அவர்களைப் போய்ப் பார்க்கிறேன் என்று சொன்ன மாத்திரத்திலேயே; புக்கவர் கைதொழ: தூதுவர் அவன் முன்னிலையில் வந்து விட்டார்கள் — தலைமேல் கூப்பிய கையினராய். தீதிலன் கொல் திருமுடியோன் என்றான்: சக்கரவர்த்தி சௌக்கியமாய் இருக்கிறார் அல்லவா, — என்று கேட்டான். குறிப்பு: எல்லாம் அவசரம் என்பதைச் செய்யுளின் பாவம் காட்டுகிறது.]

# டில்லி முண்டு

— நாடோடி —

★ மேலே இருக்கும் தலைப்பை டில்லி "மண்டு" என்று தவறுதலாகப் படித்து விட்டு, யாரடா அந்த டில்லி மண்டு என்று மூளையைக் குழப்பிக் கொள்ளாதீர்கள். நான் எழுதப் போவது மண்டுவைப் பற்றியல்ல, முண்டுவைப் பற்றி. மண்டுவைப் பற்றி எழுதினால் வீண் தாம்பத்ய கலகம்தான் நேரிடும். யான் யாரை மண்டு என்று சொல்லாமல் சொல்லுகிறேன் என்பதை நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

டில்லி முண்டு என்றதும் எங்கள் ஆபீஸ் நாயருக்குக் கோபம் வந்து விட்டது. அவன் ஊர் முண்டாகிய மலையாள முண்டைப் பழிக்கலாச்சா என்று அவனுக்குக் கோபம்!

"டில்லி முண்டுனெ எந்தானே விசேஷம்! ஈ ராஜ்யத்தே முண்டுனெ எந்தானே குறைச்சலு?" என்று கைகளை ஆட்டிக்கொண்டு சண்டைக்கு வந்து விட்டான்!

ஆனால் எங்கள் நாயர் என்னதான் கைகளை ஆட்டினாலும், டில்லி முண்டு உசத்தி, உசத்திதான்; மலையாள முண்டு, தாழ்த்தி, தாழ்த்திதான். ஏனெனில் மலையாள முண்டுவுக்கு இல்லாத சில விசேஷ குணங்கள் டில்லி முண்டுவுக்கு உண்டு. டில்லி முண்டுவுக்குக் கைகள் உண்டு, கால்கள் உண்டு. கிராப்பும் உண்டு, குடுமியும் உண்டு. உங்களுக்குச் சந்தேகமாய் இருந்தால் பக்கத்தில் உள்ள படத்தைப் பாருங்கள். அந்தப் படத்தில் காணப்படுகிறானே ஒரு பையன், அவன்தான் டில்லி முண்டு. வீட்டில் வேலை செய்ய வரும் அந்தப் பக்கத்துப் பையன்களை முண்டு என்றுதான் டில்லியில் அழைக்கிறார்கள்.

★ நானும் சரசுவும் டில்லிக்குச் சென்றதும், எல்லாரையும்போல் நாங்களும் எங்கள் வீட்டில் ஒரு முண்டுவை வேலைக்கு அமர்த்திக் கொண்டோம். ஆனால் முண்டுவிடம் வேலை வாங்க வேண்டுமே, அதற்கு வேண்டிய ஹிந்தி எனக்கும் தெரியாது, சரசுவுக்கும் தெரியாது. அத்தனைக்கும் நான் ஹிந்தி ராஷ்டிர பாஷா பரீட்சை கொடுத்திருக்கிறேன் என்று பெயர்!

இந்த மாதிரி ஒரு முண்டுவிடம் பேச வேண்டிய சாதாரண நிலைமை எனக்கு ஏற்படும் என்று இந்த தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபையார் எதிர்பார்க்கவில்லை என்றே தோன்றுகிறது. தேச பக்தி, சுயராஜ்யத்தின் அவசியம், மாதர் சுதந்திரம், ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை ஆகிய இது போன்ற பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசு என்றால் ஹிந்தியில் விளாசித் தள்ளி விடுவேன். அதற்கு வேண்டிய சொற்றொடர்களும், பெரிய, பெரிய வார்த்தைகளும் எனக்கு இந்த ஹிந்தி பிரசார சபையார் சொல்லிக் கொடுத்திருந்தார்கள்.

ஆனால் ஒரு முண்டுவைப் பார்த்து, "அடுப்பை மூட்டு", "கரியைக் குமுட்டியில் போடு" "பால் பொங்குகிறது. கீழே இறக்கி வை" ஆகிய இது போன்ற சாதாரண விஷயங்களைச் சொல்வதற்கு வேண்டிய வார்த்தைகளை எனக்குச் சொல்லித் தரவில்லை.

★ சரசுவுக்கோ எனக்குத் தெரிந்த ஹிந்தி கூடத் தெரியாது. ஆனால் இதற்காக அவள் பயந்ததாகத் தெரியவில்லை. "ஹிந்தி ஸ்வபோதினி மாத்திரம் ஒன்று வாங்கிக் கொடுத்து விடுங்கள். நான் இந்த முண்டுவைத் திணற அடிக்கிறேனா, இல்லையா, பாருங்கள்" என்றாள்.

அப்படியே அவளுக்கு ஒரு ஹிந்தி ஸ்வபோதினி வாங்கிக் கொடுத்தேன். அதில் இந்த மாதிரி முண்டுகளை வேலை வாங்குவதற்கு வேண்டிய வீட்டு சம்பந்தமான வாக்கியங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. ஆனால் அந்த வாக்கியங்களை ஹிந்தியில் மாத்திரம் கொடுத்துத் தொலைத்திருக்கக் கூடாதா? அப்படியின்றிப் பக்கத்தில் தமிழிலும் உச்சரிப்பு போட்டிருந்தார்கள்.

இப்படிப் பக்கத்தில் தமிழில் உச்சரிப்பு கொடுக்கப்பட்டிருந்தது அனர்த்தமாகப் போய்விட்டது!

ஏனெனில் சிரமப்பட்டு ஹிந்தி எழுத்துக்களைக் கற்றுக்கொண்டு பிறகு ஹிந்தியும் கற்றுக்கொள்ளவேண்டும் என்று சரசுவுக்கு இருந்த ஆசை போய்விட்டது! அந்த தமிழ் உச்சரிப்பு வார்த்தைகளை

வைத்துக்கொண்டே ஜமாய்த்து விட லாம் என்று தீர்மானித்து விட்டாள்!

★ தினம் காலையில் எழுந்ததும் சரசு அந்தப் புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்து முண்டுவிடம் ஏதேதோ சொல்வாள். ஆனால் இவள் பேசுகிற பாஷை முண்டுவுக்கு ஒன்றும் புரியாது. இருந்தாலும், ரொம்ப கவனித்துக் கேட்கிறவன்போல் காது கொடுத்துக் கேட்டுவிட்டு, தனக்கு எந்தெந்தக் காரியங்கள் உசிதம் என்று படுகிறதோ அவற்றைச் செய்து கொண்டிருப்பான்.

எனவே வீட்டில் கொஞ்ச நாளைக்குக் காரியங்கள் சுமுகமாக நடந்து கொண்டிருந்தன. ஆனால் சரசுவின் "ஹிந்தி அறிவு" விசாலப்பட, விசாலப்பட நிலைமை விபரீதமாகிக்கொண்டு வந்தது. சரசுவின் ஹிந்தி உச்சரிப்பு நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக மாற ஆரம்பித்து விட்டது. "குமுட்டியில் கரியைப் போடு" என்று சரசு சொல்வது "குமுட்டியில் பாலைக் கொட்டு" என்று சொல்வது போலிருக்கும். "அடுப்பை மூட்டு" என்று சொல்வது "அடுப்பை உடைத்துப் போடு" என்று சொல்வது போலிருக்கும். "குளிக்க வெந்நீர் எடுத்து வை" என்று சொல்வது வெந்நீரை எடுத்து அடுப்பில் கொட்டு" என்று சொல்வது போலிருக்கும்.

ஆனால் நல்ல வேளையாக முண்டு அப்படியெல்லாம் ஒன்றும் செய்து விடவில்லை. சரசு சொன்ன ஹிந்தியைச் சரியானபடி அர்த்தம் பண்ணிக் கொண்டு காரியங்களை நடத்திக் கொண்டு வந்தான். நாளடைவில் இவனுக்கும், சரசுவுக்குமிடையே ஒரு புது பாஷை உற்பத்தியாகிவிட்டது. சரசுவும் தான் என்னமோ ஹிந்தி வெகு நன்கு கற்றுக் கொண்டு விட்டதுபோல் கர்வப் படத் தொடங்கி விட்டாள்.

★ ஆனால் எனக்கு என்னமோ இது பெரிய தர்ம சங்கடமாகி விட்டது. ஏனெனில் இவர்கள் இருவருக்குமிடையே இப் புது பாஷை வளர, வளர இம் முண்டுவை வேலையை விட்டு நீக்குவது முடியாத காரியம் என்று ஆகி விட்டது.

முண்டுவை வேலையை விட்டு நீக்குவானேன் என்று நீங்கள் கேட்கலாம். பின் நீங்களே சொல்லுங்கள், முண்டு தினம் ஒரு சாமான் உடைத்துக் கொண்டு வந்தால் அவனை வேலையை விட்டு நீக்காமல் வேறு என்ன பண்ணுவது? ஆனால் சரசு கற்று வைத்துக் கொண்டிருந்த "புது ஹிந்தி"யை வைத்துக்கொண்டு எப்படிப் புது முண்டுவை வேலைக்கு வைத்துக் கொள்வது? ஆகவே என்ன பண்ணுவது என்று தெரியாமல் பல்லைக் கடித்துக் கொண்டிருந்தேன்.

ஆனால் வெகுநாள் பல்லைக் கடித்துக் கொண்டிருக்க வேண்டிய சிரமம் எனக்கு முண்டு வைக்க வில்லை.

ஒரு நாள் என் நண்பர் ஒருவரைச் சாப்பிட அழைத்திருந்தேன். அன்றைக்கு என்று சரசு போட்ட உத்தரவுகளை முண்டு வழக்கப்படி புது ஹிந்தியில் அர்த்தம் பண்ணிக் கொள்ளாமல் சரியான ஹிந்தியில் அர்த்தம் பண்ணிக் கொள்ளவே, அனர்த்தம் விளைந்து விட்டது! வளைத்து வளைத்துச் சொல்வானேன்? அன்றைக்கு முண்டு எங்கள் எல்லார் சாப்பாட்டு வாயிலும் மண்ணைப் போட்டு விட்டான்.



தான் ஞாபக மறதியால் அப்படிச் செய்து விட்டதாக முண்டு எவ்வளவோ சொல்லியும் சரசு கேட்காமல் முண்டுவை 'உட்கார்த்தி வைத்து விட்டாள்.' (சரசுவின் 'புது ஹிந்தி'யில் 'உட்கார்த்தி வைத்தல்' என்றால் வேலையை விட்டு நிறுத்தி வைத்தல் என்று அர்த்தம்!)

சரசுவின் பாஷையைப் புரிந்து கொள்ளக் கூடிய இந்த ஒரே முண்டு வேலையை விட்டு "உட்கார்ந்து விடவே" வேறு முண்டுவை வேலைக்கு வைத்துக் கொள்ளப் பயந்து நானும் டில்லி வேலையை விட்டு 'உட்கார்ந்து விட்டேன்!'

குழந்தையின் மகிழ்ச்சியைக் காண
விரும்பாத பெற்றோர்களுண்டா ?



இக் குழந்தையின் ஆனந்தத்திற்குக் காரணம்

**சார்லீஸ் பிஸ்கட்ஸ்**

சாப்பிடுகிறோம் என்பதுதான் !

குழந்தைகளுக்கு உன்னத உணவு !
பெரியவர்களுக்கு இனிய சிற்றுண்டி !
எங்கும் கிடைக்கும்.
சார்லீஸ் பிஸ்கட்ஸ் என்று கேளுங்கள்.

# Charley & Co.

*Biscuits Manufacturers, Usilampatti.*

*Sole Agents for Madras City:*

Messrs. SAIRAM & Co.,

GENERAL MERCHANTS, PYCROFTS ROAD, TRIPLICANE, MADRAS.

ஏற்படுத்திய மகா புருஷர் நாகார்ஜுன பிக்ஷுவின் தீர்க்க திருஷ்டியை என்னவென்று புகழ்வது? இந்த புத்த பகவானுடைய சிலைக்குப் பின்னால் நாங்கள் மறைந்திருக்கிறோம், ஆயனரே!'' என்று கூறினார்.

ஆயனர் தயங்கி, "ஒருவேளை தெரிந்துவிட்டால்...?'' என்று கூற, உடனே பிக்ஷு பரஞ்சோதியின் கையைப் பிடித்து அழைத்துச் சென்று புத்தர் சிலையின் பின்னால் மறைந்து, "எப்படி ஆயனரே?'' என்றார்.

இதற்குள் குதிரைகளின் காலடிச் சத்தம் நெருங்கிவிடவே, ஆயனருக்கு யோசிப்பதற்கே நேரமில்லாமல் போயிற்று. "ஜாக்கிரதை, அடிகளே! ஜாக்கிரதை!'' என்று சொல்லிவிட்டுச் சக்கரவர்த்தியை வரவேற்பதற்காக விரைந்து வாசற் பக்கம் சென்றார் ஆயனர்.

* * *

சக்கரவர்த்தியும் குமாரரும் விடை பெற்றுச் சென்ற பிறகு வீட்டுக்குள் நுழைந்த சிவகாமிக்கு, புத்தர் சிலைக்குப் பின்னாலிருந்து நாகநந்தியும் பரஞ்சோதியும் கிளம்பியது மிக்க வியப்பை யளித்தது என்று சொன்னோமல்லவா? ஆனால் அதே காட்சியானது ஆயனருக்குச் சிறிதும் வியப்பை யளித்திராது என்பதை மேலே கூறிய விவரங்களிலிருந்து வாசகர்கள் அறிந்து கொண்டிருப்பார்கள்.

எனினும், சிவகாமியைக் காட்டிலும் ஆயனரிடத்திலேதான் பரபரப்பு அதிகமாகக் காணப்பட்டது.

"அடிகளே! நல்ல வேளையாய்ப் போயிற்று. எப்பேர்ப்பட்ட அபாயத்திலிருந்து தப்பினோம்?'' என்றார் ஆயனர்.

"புத்த பகவானைச் சரணமாக அடைந்தவர்களுக்கு அபாயமே கிடையாது, ஆயனரே! இருக்கட்டும்; அசுவமேத யாகத்தில் குதிரையை மறந்து போன கதையாக, நீரும் சக்கரவர்த்தியிடம் குதிரை கேட்க மறந்து விட்டீரல்லவா?'' என்றார் புத்த பிக்ஷு.

"மறக்க வில்லை, அடிகளே! இந்த இடத்துக்கு வந்ததும் சக்கரவர்த்தி கூறிய வார்த்தை என்னைக் கதிகலங்கச் செய்து விட்டது. உங்களைத்தான் சக்கரவர்த்தி பார்த்து விட்டாரோ என்று பயந்து விட்டேன். அப்புறம் குதிரையைப் பற்றிக் கேட்க எனக்கு நா எழவில்லை.''

"ஆமாம்; சக்கரவர்த்தி இராஜாங்கத் துரோகத்துக்காக உம்மைத் தண்டிக்கப் போவதாகச் சொன்னது என்னைக்கூட ஒரு கணம் தூக்கிவாரிப் போட்டு விட்டது!''

மேற்கூறிய சம்பாஷணையின்போதே பிக்ஷுவும் பரஞ்சோதியும் புத்தர் சிலைக்குப்பின்னாலிருந்து வெளியே வந்ததுடன், மூன்றுபேரும் ஏற்கனவே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த இடத்துக்கு வந்து அமர்ந்தார்கள்.

அப்போது சிவகாமியும் அந்த இடத்துக்கு வந்து சேரவே, புத்த பிக்ஷு அவளை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, "ஆயனரே! சிவகாமியிடம் நீங்கள் எல்லா விவரங்களையும் சொல்ல வேண்டும். எங்களை ஏதோ பேயோ, பிசாசோ என்று அவள் சந்தேகிக்கிறாள் போலிருக்கிறது!'' என்றார்.



னரே! நல்ல சகுனந்தான். இந்த சமயத்தில் இவ்விடம் சக்கரவர்த்தியே விஜயம் செய்வதானது நமது காரியம் ஜயமாகப் போகிற தென்பதற்கு அறிகுறி. ஆனால், நானும் பரஞ்சோதியும் தான் இச்சமயம் பூஜை வேளையில் கரடிகளாக இருக்கிறோம். எங்களைச் சக்கரவர்த்தி பார்த்து விட்டால் எல்லாக் காரியமும் கெட்டு விடும்.

"சக்கரவர்த்தி வந்து விட்டுப் போகும் வரையில் நாங்கள் புத்த பகவானைச் சரணடைகிறோம், ஆயனரே!" என்றார்.

விஷயம் விளங்காமல் ஆயனர் நாகநந்தியை நோக்கியபோது, அவர், "தெரியவில்லையா! புத்த பகவானுடைய சிலையை எப்போதும் பெரிதாகச் செய்ய வேண்டுமென்று



படைகள் காஞ்சிக்கு வருவதற்குள் இவன் போய் வந்தால் வந்தது. அப்புறம் எது எப்படி ஆகுமோ தெரியாது. குதிரைக்கு என்ன ஏற்பாடு?" என்று கேட்டார்.

"அது ஒன்றும் கஷ்டமில்லை. சக்கரவர்த்தியிடம் விண்ணப்பித்துக் குதிரை வாங்குகிறேன் ..."

"இந்த யுத்த நெருக்கடியில் சக்கரவர்த்தி குதிரை கொடுப்பாரா, சிற்பியாரே!"

"அடிகளே! உங்களுக்குத் தெரியாது. அஜந்தா வர்ணச் சேர்க்கை இரகசியத்தை அறிந்து கொள்வதில் எனக்கு எவ்வளவு ஆசையோ, அவ்வளவு ஆசை மகேந்திர சக்கரவர்த்திக்கும் உண்டு."



"அப்படியானால், சக்கரவர்த்தியிடம் பிரயாண இலச்சினையும் வாங்கி விடுங்கள். யுத்த சமயமானதால், பரஞ்சோதி போகும் வழியில் ஏதாவது தடை உண்டாகலாம்."

"உண்மைதான். இலச்சினையும் வாங்கி விடுகிறேன்."

"இதில் என்னைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே வேண்டாம். பௌத்த சமயிகள் விஷயத்தில் சக்கரவர்த்தியின் மனோபாவந்தான் உங்களுக்குத் தெரியுமே? ... சக்கரவர்த்தியிடம் எப்போது போகிறீர்கள்? ...."

புத்தபிக்ஷு இவ்விதம் கேட்டுக் கொண்டிருக்கும்போதே தூரத்தில் பேரிகை முழக்கமும் சங்க நாதமும் கேட்டன.

"அடிகளே! கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வருகிறது! இதோ சக்கரவர்த்தியே வருகிறார்!" என்று குதூகலத்துடன் கூறினார் ஆயனர்.

நாக நந்தியடிகளின் கடுகடுப்பான முகத்தில் புன்னகை தோன்றியது. அவர் சிறிது யோசித்த வண்ணமாய் அங்கு மிங்கும் பார்த்தார். பிறகு, ஒரு முடிவுக்கு வந்தவரைப்போல், "ஆய

மாத காலத்தில் காரியத்தைச் சாதித்துக்கொண்டு திரும்பி விடலாம்."

ஆயனர் மிக்க ஆவலுடன் பரஞ்சோதியைப் பார்த்து, "தம்பி! உன்னால் முடியுமா? போய் வருகிறாயா?" என்று கேட்டார்.

எங்கே போகவேண்டும், எதற்காக என்பதொன்றும் நன்கு அறியாதவனான பரஞ்சோதி பரக்க விழித்த வண்ணமாய், "ஆகட்டும், ஐயா! தங்கள் கட்டளை எதுவானாலும் நிறைவேற்றக் காத்திருக்கிறேன்" என்றான்.

"பரஞ்சோதிக்கு விவரமாகச் சொல்லுங்கள், ஆயனரே!" என்றார் பிக்ஷு.

"உண்மைதான்! இவனுக்கு விவரம் ஒன்றும் தெரியாதல்லவா? தாங்களே சொல்லுங்கள் சுவாமி!"

இவ்விதம் ஆயனர் கூற, புத்த சந்நியாசி பரஞ்சோதியைப் பார்த்துச் சொல்வார்:—"கேள், தம்பி! வடக்கே வெகு தூரத்தில், கோதாவரி நதிக்கும் அப்பால், அஜந்தா என்ற மலை இருக்கிறது. வெகு காலத்துக்கு முன்னால் அந்த மலையைக் குடைந்து புத்த சைத்தியங்களை அமைத்திருக்கிறார்கள். அந்த சைத்யங்களில் புத்த பகவானுடைய வாழ்க்கையையும், அவருடைய பூர்வ அவதாரங்களின் மகிமையையும் விளக்கும் அற்புதமான சித்திரங்கள் வரையப்பட்டிருக்கின்றன. ஐந்நூறு வருஷத்துக்கு முன்னால் வரைந்த அந்த ஓவியங்கள் இன்றைக்கும் வர்ணம் அழியாமல் புதிதாய் எழுதினவை போலவே இருக்கின்றன.

அந்த அற்புத சித்திரங்களை எழுதிய சித்திரக்கலை மேதாவிகளின் சந்ததிகள் இன்னமும் அங்கே இருக்கிறார்கள். அவர்கள் அந்த அஜந்தா குகையில் பழைய சித்திரங்களுக்குப் பக்கத்தில் புதிய சித்திரங்களை வரைந்திருக்கிறார்கள். ஆயிரம் வருஷம் ஆனாலும் அழியாமலிருக்கக்கூடிய வர்ணச் சேர்க்கையின் இரகசியம் அவர்களுக்குத் தெரியும். அந்த இரகசியத்தை அறிந்து தமக்குச் சொல்லவேண்டுமென்று ஆயனர் என்னை வெகு நாளாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார். நானும் முயற்சி செய்து வந்தேன். அந்த இரகசிய முறையை அறிந்த அஜந்தா சித்திரக்காரர் ஒருவரை எனக்குத் தெரியும். அவர் என் சிநேகிதர். அவர் எங்கே இருக்கிறார் என்று இத்தனை நாளும் விசாரித்துக் கொண்டிருந்தேன். நாகார்ஜுன மலையில் இப்போது அவர் இருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. நீ போனாயானால் அந்த இரகசியத்தை அவரிடம் அறிந்து கொண்டு வரலாம்."

பிக்ஷு இவ்விதம் சொல்லி நிறுத்தியதும், ஆயனர் "தம்பி! தம்பி! நீ போய் வருகிறாயா? போய் அந்த இரகசியத்தைக் கொண்டு வந்தாயானால் என் வாழ்க்கை மனோரதங்களில் ஒன்றை நிறைவேற்றியவனாவாய். ஆனால் உன்னை நான் வற்புறுத்தவில்லை, தம்பி! இஷ்டமிருந்தால் போ!" என்றார்.

பிக்ஷுவும் ஆயனரும் பேசி வந்தபோது பரஞ்சோதியின் உள்ளத்தில் வித விதமான கிளர்ச்சிகள் உண்டாகி மறைந்து வந்தன. அவை பெரும்பாலும் குதூகலக் கிளர்ச்சிகளாகத்தான் இருந்திருக்குமென்று நாம் சொல்ல வேண்டியதில்லை. பரஞ்சோதிக்குக் குதிரை மீதேறிச் செல்வதில் மிகுந்த பிரியம் உண்டு. ஆனாலும் இது வரையில் அவன் உயர்ந்த ஜாதிக் குதிரைமேல் ஏறியது கிடையாது. நல்ல ஜாதிக் குதிரைமேல் ஏறி நெடுந்தூரம் பிரயாணம் செய்வது என்ற எண்ணமே அவனுக்கு உற்சாகத்தை உண்டாக்கிற்று. அதோடு, இவ்வளவு முக்கியமான ஒரு காரியத்துக்காக ஆயன மகா சிற்பியினால் ஏவப்பட்டு யாத்திரை போகிறதென்பது அவனுக்கு மிக்க பெருமை உணர்ச்சியையும் அளித்தது. ஏட்டில் எழுத்தாணியினால் எழுதிக்கொண்டு உட்கார்ந்திருப்பதைக் காட்டிலும் இம்மாதிரி காரியங்களில் ஈடுபடுவதுதான் அவனுடைய இயல்புக்கு ஒத்தது என்பதை நாம் அறிவோமல்லவா?

"ஐயா! தங்களுடைய விருப்பம் எதுவோ, அதன்படி நடந்துகொள்ளுமாறு என் மாமா சொல்லியிருக்கிறார். தாங்கள் போகச் சொல்லிக் கட்டளையிட்டால் அப்படியே போய் வருகிறேன்" என்றான்.

அப்போது நாகநந்தி அடிகள், "தாமதிக்க நேரமில்லை, ஆயனரே! வாதாபி

வரமாட்டார். அவரைச் சோழ நாட்டுக்கு ஸ்தல யாத்திரை போகும்படியாகச் சக்கரவர்த்தியே சொல்லியனுப்பி விட்டாராம். மடத்தையே ஒரு வேளை மூடினாலும் மூடி விடுவார்களாம்.''

"அடிகளே! தங்களுக்கு எத்தனையோ விஷயங்கள் தெரிந்திருக்கின்றன? எனக்கு ஒன்றுமே தெரியவில்லையே?'' என்று ஆயனர் தாங்காத ஆச்சரியத்துடன் கூறினார்.

"நீங்கள் இந்தக் காட்டுக்குள் வந்து உட்கார்ந்திருக்கிறீர்கள்; அதனால் தெரியவில்லை. நான் நாடெல்லாம் சுற்றுகிறேன்; அதனால் தெரிகிறது'' என்றார் பிக்ஷு.

ஆயனர் சிறிது யோசனை செய்து, "தம்பி, இங்கேதான் இப்படியெல்லாம் குழப்பமாயிருக்கிறதே? நீ ஊருக்கே திரும்பிப் போய் விடுகிறாயா? உன் விருப்பம் என்ன?'' என்று கேட்டார்.

"ஐயா! கல்வி கற்றுக்கொண்டு திரும்பி வருகிறேன் என்று நான் ஊரில் சொல்லிவிட்டு வந்தேன். ஏதாவது ஒரு கலை பயிலாமல் திரும்பிப் போக எனக்கு விருப்பமில்லை. தங்களிடமே கல்வியும் சிற்பமும் பயில விரும்புகிறேன். என்னைச் சீடனாகத் தாங்கள் அங்கீகரிக்க வேண்டும்'' என்றான்.

பரஞ்சோதியின் பணிவான பேச்சைக் கேட்டு ஆயனர் பூரித்தவராய் "அப்படியே யாகட்டும், தம்பி! நீ இங்கேயே இருந்து என்னிடம் கற்றுக் கொள்ளக் கூடியதை யெல்லாம் கற்றுக் கொள்!'' என்றார்.

"ஆனால், ஆச்சாரிய தக்ஷிணை விஷயம் எப்படி? அதை முன்னாலேயே வாங்கிக் கொள்ளவேண்டும், ஆயனரே!'' என்று பிக்ஷு கூறியதும், அவர் பரிகாசமாகச் சொல்வதாய் எண்ணி ஆயனர் நகைத்தார்.

"நான் வேடிக்கை பேசவில்லை. உண்மையாகத் தான் சொல்கிறேன். இந்த யுத்தகாலத்தில் எது எப்படியிருக்குமோ? பரஞ்சோதி முன்னதாகவே குரு தக்ஷிணை கொடுத்து விடவேண்டியதுதான்'' என்று கூறிய பிக்ஷுவின் முகத்தை ஆயனர் வியப்புடன் உற்று நோக்கினார்.

"இன்னும் விஷயம் உங்களுக்கு விளங்கவில்லையா? பரஞ்சோதி உங்களுக்கு அளிக்கவேண்டிய குருதக்ஷிணை அஜந்தா சித்திர இரகசியந்தான்!'' என்று பிக்ஷு கூறினாரோ, இல்லையோ, ஆயனரின் முகத்தில் ஏற்பட்ட ஆவலையும் பரபரப்பையும் பார்க்க வேண்டுமே! அவர் புதிய மனிதராகவே மாறி விட்டதாகத் தோன்றியது.

"அடிகளே! முன்னமே அதைப் பற்றிக் கேட்டேன்; தாங்கள் ஒன்றும் சொல்லவில்லை. தகவல் நிஜமாக வந்து விட்டதா? ஆனால், இந்தப் பிள்ளைக்கும் அஜந்தா சித்திர இரகசியத்துக்கும் என்ன சம்பந்தம்? இவனால் என்ன செய்ய முடியும்?......'' என்று கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனார் ஆயனர்.

"நாகார்ஜுன மலையில் உள்ள புத்த ஸங்கிராமத்திற்கு அந்த இரகசியம் வந்திருக்கிறது. அவ் விடத்துக்கு யாரையாவது அனுப்பி வாங்கிவரச் சொல்லவேண்டும். உம்முடைய புதிய சீடனைப்போல் அந்தக் காரியத்துக்குத் தகுதியான ஆளைக் காண முடியாது.''

"நாகார்ஜுன மலையா? வெகு தூரம் இருக்கிறதே, சுவாமி! கிருஷ்ணா நதியின் கரையிலல்லவா இருக்கிறது? வழியில் எவ்வளவோ அபாயங்கள் ஏற்படுமே?''

"அபாயங்களை யெல்லாம் கடந்து போய் வரக்கூடிய வீரனாகையால்தான் பரஞ்சோதியைச் சொன்னேன். இந்தப் பிள்ளை யானைமேல் வேலை எறிந்த விதத்தைத் தான் கண்ணால் பார்த்தீரே?''

"ஆனாலும், வெகுதூரம் இருக்கிறதே, சுவாமி! இவனால் கால் நடையாகப் போய்விட்டு வர முடியுமா?''

"முடியாது. நல்ல உயர்ந்த ஜாதிக் குதிரை ஒன்று இவனுக்கு வாங்கித்தர வேண்டும்.''

"இவனுக்குக் குதிரை ஏறத் தெரியுமா, என்ன?''

"நன்றாகச் சொன்னீர்கள். இவன் குதிரையும் ஏறுவான்; யானையும் ஏறுவான். அதெல்லாம் நான் கேட்டுத் தெரிந்துகொண்டு விட்டேன். இவனுக்கு மட்டும் மனமிருந்தால், ஒரு



# சிவகாமியின் சபதம்

**கல்கி**

## இருபதாம் அத்தியாயம்

## அஜந்தாவின் இரகசியம்

சற்று நாம் பின்னால் சென்று, சிவகாமி மனச் சோர்வுடன் ரதியைக் கூட அழைத்துக்கொண்டு தாமரைக் குளத்துக்குப் புறப்பட்டுச் சென்ற பிறகு, ஆயனர் வீட்டில் என்ன நடந்தது என்பதைக் கவனிக்கவேண்டும்.

தமது அருமை மகளைப்பற்றி புத்த பிக்ஷு சிறிது விரஸமாகப் பேசியது, அதாவது 'மதனனுடைய புஷ்ப பாணங்களினால் நொந்தவளாகத் தோன்றுகிறாள்' என்று கூறியது ஆயனருக்குப் பிடிக்கவில்லை. எனவே, பிக்ஷுவிடம் அவர் பேசுவதை நிறுத்திவிட்டு, பரஞ்சோதியைப் பார்த்து, "தம்பி! என்ன நோக்கத்துடன் நீ காஞ்சிக்குப் புறப்பட்டு வந்தாய்! உனக்கு என்னால் ஆகவேண்டிய உதவி ஏதாவது இருந்தால் சொல்லு!" என்றார்.

"நாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து கல்வி பயிலும் நோக்கத்துடன் காஞ்சிக்கு வந்தேன், ஐயா! சிற்பக்கலை கற்றுக்கொள்ளும் விருப்பமும் இருக்கிறது. தங்களைக்கண்டு தங்கள் கட்டளைப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று மாமா எனக்குச் சொல்லி அனுப்பினார். ஓலையில் எல்லாம் விவரமாக எழுதியிருந்தார்" என்றான் பரஞ்சோதி.

"ஓலை என்னத்திற்கு, தம்பி? என் அருமைச் சிநேகிதருக்காக நான் எதுவும் செய்யக்கடமைப்பட்டிருக்கிறேன். நீயோ எங்களுக்குப் பேருபகாரம் செய்திருக்கிறாய். நான் இன்று உயிரோடிருந்து இந்தச் சிற்பப் பணியைச் செய்வதே உன்னுடைய வீரச் செயலினால் தானே? உன் இஷ்டம் எதுவோ, சொல்லு! நாவுக்கரசர் பெருமான் தற்சமயம் காஞ்சியில் இல்லை. ஸ்தல யாத்திரை சென்றிருக்கிறார். அதனால் என்ன! — நானே நேரில் உன்னை அழைத்துப் போய் அந்தச் சிவநேசரின் மடத்தில் சேர்த்துவிட்டு வருகிறேன். உன்னைச் சக்கரவர்த்தியிடமும் அழைத்துப் போகவேண்டும். மகா வீரச்செயல் புரிந்து எங்களைக் காத்த தீரனை உன்னைப் பார்த்தால், சக்கரவர்த்தி பெரிதும் சந்தோஷப்படுவார்..."

"அதுமட்டும் செய்ய வேண்டாம், ஆயனரே!" என்று புத்தபிக்ஷு குறுக்கிட்டார்.

"ஏன், அடிகளே?" என்று ஆயனர் கேட்டார்.

"காஞ்சி சக்கரவர்த்தியின் காராக்கிரஹத்திலிருந்து தப்பி வந்தவர்களுக்கு என்ன தண்டனை என்று உங்களுக்குத் தெரியாதா?"

"ஏன் தெரியாது? — மரண தண்டனைதான்! இந்தக் கேள்வி எதற்காகக் கேட்கிறீர்கள் என்றுதான் தெரியவில்லை."

"இவன் சக்கரவர்த்தியிடம் சென்றால் அந்தத் தண்டனைக்கு உள்ளாக நேரிடும்!"

"கடவுளே! — இதென்ன சொல்கிறீர்கள்? இவன் காராக்கிரஹத்தி

விருந்தானு என்ன? எப்போது? எதற்காக?"

"உங்களை இவன் தப்புவித்தானே, அன்று இரவு நகரில் திக்குத் திசை தெரியாமல் வெகு நேரம் வரையில் அலைந்து கொண்டிருந்தான். இவனை ஒற்றன் என்பதாகச் சந்தேகித்து நகர்க் காவலர்கள் சிறையில் அடைத்து விட்டார்கள்......"

"அடாடா! அப்புறம்?"

"அன்றிரவே சிறையிலிருந்து தப்பித்து வந்து விட்டான்......!"

"என்ன? என்ன?—சிறையிலிருந்து எப்படித் தப்பித்தான்?"

"தப்புவதற்கு வழியா இல்லை? கூரை வழியாக வெளியே வந்து விட்டான்..."

ஆயனர் அதிசயத்துடன் பரஞ்சோதியைப் பார்த்த வண்ணம், "ஆகா! என் சிநேகிதருடைய மருமகன் இலேசுப்பட்டவன் இல்லை போலிருக்கிறது! பெரிய கைகாரனுயிருக்கிறுன்! அதனுல் பாதகமில்லை, அடிகளே! இவனை நானே சக்கரவர்த்தியிடம் அழைத்துச் சென்று இவனை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். இவன் எங்களைப் பெரும் விபத்தி லிருந்து காப்பாற்றியவன் என்று அறிந்தால், சக்கரவர்த்தி இவனைக் கட்டாயம் மன்னிப்பார்" என்ருர்.

"உங்களுக்காக மன்னித்து விடுவார்; உண்மைதான்! ஆனுல் இவன் உடனே போர்க்களம் போகும்படி நேரிடும். இந்த யுத்த காலத்தில் இவனைப் போன்ற வீர வாலிபன் கிடைத்தால் சும்மா விட்டு விடுவார்களா? பல்லவ ராஜ்யத்தில் எங்கே பார்த்தாலும் படை திரட்டுகிருர்கள் என்று தெரியுமோ, இல்லையோ, ஆயனரே!"

இதைக் கேட்ட ஆயனர் மௌனமாக யோசிக்கலானுர். அதைப் பார்த்த பிக்ஷு மேலும் கூறுவார்:—

"ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையான இவனுக்குப் போர்க்களத்தில் ஏதாவது நேர்ந்து விட்டால், பாவம், இவன் தாயார் உம்மைச் சபிப்பார். அது மட்டுமல்ல; தர்மசேனரின் தமக்கை திலகவதியைப் போல் இன்னெரு பெண் வாழ்நாளெல்லாம் கன்னிகையாகக் காலங் கழிக்க நேரிடும்!"

ஆயனருக்குச் சுருக் என்றது. புத்த பிக்ஷு தமது மகளைத்தான் அவ்விதம் குறிப்பிடுகிருர் என்று அவர் எண்ணினுர். ஒரு வேளை அவருடைய கூற்றில் ஏதேனும் உண்மை இருக்குமோ? சிவகாமி மூன்று நாளாய் ஒரு விதமாக இருப்பதற்குக் காரணம் இந்த வாலிபன் பேரில் அவளுடைய மனம் சென்றதாக இருக்கலாமோ? — அப்படியிருந்தால் ஒரு விதத்தில் நல்லது தானே! சிவகாமியை எப்படியும் மணம் செய்து கொடுக்கத்தான் வேண்டுமென்ருல், தன் அருமைச் சிநேகிதரின் மருமகனுக்குக் கொடுத்து. அந்த வீர வாலிபனைத் தன் சீடனுக்கிக் கொள்ளுதல் நல்லதல்லவா? — இவ்வாறெல்லாம் சில விநாடி நேரத்துக்குள் எண்ணியவராய் ஆயனர் பரஞ்சோதியைச் சற்றுக் கவனமாக உற்றுப் பார்த்தார்.

அவருடைய எண்ணப் போக்கையெல்லாம் அப்படியே தெரிந்து கொண்டவரான புத்த பிக்ஷு, "இல்லை, ஆயனரே, இல்லை! நீங்கள் நினைப்பது போல் நடப்பதற்கில்லை. இவனுடைய சொந்த மாமன் மகள் இவனுக்கென்று பிறந்து வளர்ந்து திருவெண்காட்டில் காத்துக்கொண்டிருக்கிருள்!" என்ருர்.

இதைக் கேட்ட ஆயனர் பலவித வியப்புகளுக்கு ஏக காலத்தில் ஆளானவராய், புத்த பிக்ஷுவை "உமக்கு என் எண்ணம் எப்படித் தெரிந்தது?" என்று கேட்கும் பாவனையில் ஒரு தடவை பார்த்து விட்டு, மீண்டும் பரஞ்சோதியை நோக்கி, "அப்படியா, தம்பி! என் சிநேகிதரின் பெண்ணைக் கட்டிக் கொள்ளப் போகிருயா? என்று கேட்டார்.

பரஞ்சோதி சிறிது நாணத்துடன், குனிந்து, "ஆம், ஐயா" என்ருன்.

புத்த சந்நியாசி சொல்கிருர்:— "இப்படியெல்லாமிருக்கும்போது இவனைச் சக்கரவர்த்தியிடம் அழைத்துப் போவது உசிதமா என்று யோசித்துப் பாருங்கள். நாவுக்கரசர் மடத்தில் தற்போது இவனைச் சேர்ப்பதும் நல்லதில்லை. காஞ்சிக் கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தம் செய்து வருகிருர்கள். நாவுக்கரசர் இப்போதைக்கு மடத்துக்குத் திரும்பி

‘‘சிவகாமியின் சபத’’த்தில் வரும் சில முக்கிய ஸ்தலங்கள்



# நமது கலைச் செல்வம்

சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பாரத நாட்டின் தக்ஷிண பாகத்தில் அதிசயமான கலை மறுமலர்ச்சி தோன்றியிருந்தது. சிற்பக் கலையும், சித்திரக் கலையும் மன்னர்களாலும் மக்களாலும் போற்றப்பட்டு அபரிமிதமான வளர்ச்சியும் இணையில்லாத மேன்மையும் அடைந்திருந்தன. மகா சிற்பிகள் பலர் நாடெங்கும் தோன்றிக் குன்றுகளைக் குடைந்து பல்லாயிரம் வருஷமானாலும் அழியாத கோயில்களை நிர்மாணித்தார்கள்; ஜீவ களை பொருந்திய கற்சிலைகளையும் காட்சிகளையும் அமைத்தார்கள்.

அத்தகைய குகைக் கோயில்களை வடக்கே எல்லோராவிலும், நாகார்ஜுன மலை என்னும் ஸ்ரீ பர்வதத்திலும், தெற்கே மாமல்லபுரம், மாமண்டூர், திரிச்சிராப்பள்ளி, சிற்றன்ன வாசல் முதலிய இடங்களிலுள்ள குன்றுகளிலும் இன்றைக்கும் நாம் காணலாம்.

அதே காலத்தில் தென்னாட்டில் சித்திரக் கலையும் செழித்தோங்கியிருந்தது. பல நூறு ஆண்டுகள் ஆனாலும் அழியாத வர்ணச் சேர்க்கை முறையை ஓவியக் கலை வல்லவர்கள் கண்டு பிடித்துக் கையாண்டார்கள். அந்த அழியாத வர்ணங்களைக் கொண்டு அற்புதமான உயிரோவியங்களை — சிரஞ்சீவிச் சித்திரங்களை — மேற்கூறிய குகைக் கோயில்களில் தீட்டினார்கள்.

அத்தகைய பழங் காலத்துச் சித்திரங்கள் அதிகமாக அழியாமலும் மாசு படாமலும் இன்றைக்கும் காணப்படும் இடங்களில் முக்கியமானது, தற்போதைய நைஜாம் ராஜ்யத்தில் உள்ள அஜந்தா மலையாகும்.

உடல் அமைப்பை உள்ளபடி சித்திரிப்பதைக் காட்டிலும், உள்ளத்தின் உணர்ச்சிகளை — மனோபாவங்களை — வெளியிடுவதையே முக்கிய நோக்கமாய்க் கொண்டவை அஜந்தா சித்திரங்கள். அந்த அஜந்தா ஓவிய முறையையே முழுமையும் தழுவிய ஓவியங்கள் தமிழ் நாட்டிலே மாமல்லபுரத்திலும் காஞ்சியிலும் ஓரளவு காணப்படுகின்றன. புதுக்கோட்டைக்கருகிலுள்ள சிற்றன்ன வாசலில் அத்தகைய சித்திரங்கள் சில மிகத் தெளிவுடன் விளங்குகின்றன. இன்னும் தெற்கே, இலங்கைத் தீவில், ஸிகிரி என்னும் இடத்திலுள்ள குன்றில், மனிதர்கள் நெருங்க முடியாத உயரத்திலுள்ள குகையில், அஜந்தா சித்திரத்தை யொத்த சில சித்திரங்கள் காணப்படுகின்றன. அபூர்வ சித்திரங்கள் எல்லாம் பெரும்பாலும் கி. பி. 550-ம் வருஷத்துக்கு மேல் கி. பி. 650-ம் வருஷத்துக்குள்ளிட்ட நூறு வருஷ காலத்தில் தீட்டப்பட்டவை யென்பது குறிப்பிடத் தக்கதாகும்.

நமது புராதனக் கலைச் செல்வங்கள் இன்றளவும் அழியாமல் நமக்குக் கிடைத்திருக்கும் சில முக்கியமான இடங்களை எதிர்ப் பக்கத்திலுள்ள தக்ஷிண பாரத நாட்டுப் படத்தில் காணலாம்.

# சொல்லாத ரகசியம்

















—சாமா—



# வேண்டாம், பட்டம் பதவி!

• கு.ரா •

என்னைக் கேட்டால், "பட்டம் பதவி எனக்கு வேண்டாம்; நான் பெரிய மனிதனாகவும் வேண்டாம்!" எனக் கண்டிப்பாய்ச் சொல்லி விடுவேன். அலாடின் கதையில் வரும் பூதம் என்னை ஒரு ஸர் பட்டதாரியாகவோ, பெரிய முதலாளியாகவோ அல்லது பெரிய தேசத் தலைவராகவோ, ஹைகோர்ட் ஜட்ஜாகவோ செய்கிறேன் என்று ஒப்புக் கொண்டால் அந்த பூதத்தை வந்த வழி பார்த்துக் கொண்டு போகச் சொல்லிவிட்டு, அது போன திக்கு நோக்கித் தண்டம் சமர்ப்பிக்க நான் தயாரா யிருப்பேன்.

"நீர் என்ன அபூர்வ மனிதரா யிருக்கிறீரே, எத்தனையோ பேர்கள் பெரிய மனிதராகத் தவம் கிடக்கிறார்கள். நீர் வலுவில் வந்தாலும் வேண்டாம் என்கிறீரே?" என்று நீங்கள் கேட்டால் அதற்கு நான் பதில் சொல்லுகிறேன்.

எந்தப் பெரிய மனிதராவது நிம்மதியாய் இருப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? அவர்கள் நிம்மதியைக் குலைப்பதற்கென்றே இந்தப் பத்திரிகை நிருபர்கள் ஏற்பட்டிருக்கிறார்கள். தலைவர் கூட்டத்தில் பேசினது ஒன்று இருக்க இவர்கள் தங்கள் பத்திரிகையில் வேறு ஒன்றாக வெளியிடக் கடைசியில் அந்தத் தலைவரின் தலை குறைந்தது ஒரு வாரம் பத்திரிகைகளில் உருளும். அவர் அந்த மாதிரி தாம் பேசினதில்லை என்று துணியைப் போட்டுத் தாண்டி அதைப் படம் பிடித்து வெளியிட்டால்தான் மற்றவர்கள் ஓய்வார்கள். சாதாரண மனிதனா யிருந்தால் நம் தலைதான் உருளுமா? துணியைத்தான் போட்டுத் தாண்ட வேண்டி யிருக்குமா?

பெரிய மனிதர் பேசாமல் மௌன விரதம் பூண்டிருந்தாலும் நிருபர்கள் விடுவதில்லை. யாராவது பிரமுகர் காலமாகி விட்டாலும் இவர்களுக்கு ஆபத்துதான். நிருபர்கள் பாதி ராத்திரியில் தூக்கத்திலிருந்து தட்டி எழுப்பி இவர்களை அபிப்பிராயம் கேட்பார்கள். "இந்த விஷயம் கேட்டதும் தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்தேன். ஒரே கலக்கமா யிருக்கிறது; நாக்கு தழுதழுக்கிறது. கண்கள் சோர்வடைகின்றன" என்று ஏதாவது — உண்மையில் தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு எழுந்தால் இப்படி யெல்லாம் உண்டாவது இயற்கைதானே? — சொல்ல வேண்டி யிருக்கும்.

ஏதாவது ஒரு குப்பைப் படத்தின் ஆரம்ப விழாவுக்குப் பெரிய மனிதர்களைத் தலைமை வகிக்கச் சொல்வார்கள். சாதாரண மனிதர்களான நாமா யிருந்தால் ஆபாசக் காட்சிகளைச் சகிக்க முடியா விட்டால் பாதிப் படத்தில் 'வாக் - அவுட்' செய்யலாம். ஆனால் பெரிய மனிதர் படத்தின் முடிவில் ஒரு சிறிய பிரசங்கம் செய்ய வேண்டுவது அவசியமாகையால் பல்லைக் கடித்துக் கொண்டே உட்கார்ந்திருப்பது அவசியமாகிறது. என்ன தொல்லை, பாருங்கள்!

ஒரு பெரிய மனிதர் நிம்மதியாய்ச் சற்றுக் காலாற வீதியில் நடந்துபோக முடியுமா? பொது ஜனங்களுக்கு நன்றாகத் தெரிந்த தலைவராய் இருந்துவிட்டால் அவரை ஒரு கும்பல் சூழ்ந்து கொண்டுவிடும்; பிறகு தனிமை ஏது? இவர்கள் ஒன்று சிறையில் அடைபட்டு இருக்கவேண்டும், அல்லது வீட்டிலே சிறைவாசம்போல் வசிக்கவேண்டும்.

மேற்கூறிய தொல்லைகள் எல்லாம் பெரிய மனிதர்கள் தங்கள் வாழ்நாளில் அனுபவிப்பவை. ஆனால் சில பெரிய மனிதர்கள் இறந்துபோன பின்பும் உபத்திரவத்திற்கு ஆளாக நேருகிறது. அபூர்வமாகச் சிலருக்கு உயிரோடு இருக்கும்போதே இந்த அவமானம் நேருகிறது. சிலையுருவில் நடுச் சந்தியில் நிற்கும் பெரிய மனிதர்களின் கதியை நினைத்தால் விசனமா யிருக்கிறது. அவர்கள் "பனியால் நனைந்து, வெயிலால் உலர்ந்து" நிற்கும் நிலையைக் காணப் பரிதாபமாய் இருக்கிறது. காகம் முதலிய பறவைகள் அந்தப் பெரியவாளின் சிலை மீது தீட்டி யிருக்கும் பல வர்ண விசித்திரங்களைப் பார்த்த பிறகு, எந்த மனிதனுக்காவது தான் பெரிய மனிதனாக வேண்டும், தன் சிலை முச்சந்தியில் நிற்க வேண்டும் என்னும் ஆவல் இருக்குமா?



எடுத்து அதிலிருந்த குழந்தையைப் பார்த்து மகிழ்ந்து தன் பாரியையிடம் கொடுத்தான். சூரிய குமாரனான கர்ணன் இவ்வாறு தேரோட்டியின் குழந்தையாக வளர்ந்தான்.





கர்ணனைப் பெற்றுவிட்டு மறுபடியும் கன்னியாகிய குந்தி விவாகத்துக்குத் தகுந்த வயது அடைந்தாள். அவள் பிதாவாகிய குந்திபோஜன் ராஜ குமாரர்களை வரவழைத்து அவளைக் கொடுக்கச் சுயம்வர சபை கூட்டினான். நிகரற்ற அழகும் குணமும் நியமமும் கொண்ட ராஜகுமாரியை மனைவியாக அடையப் பல அரச குமாரர்கள் வந்து சேர்ந்தார்கள். அந்தச் சபையிலிருந்த எல்லாருடைய ஒளியையும் மங்கச் செய்து சிம்மத்தைப் போல் வீற்றிருந்த பாரத குல சிரேஷ்டனான பாண்டு ராஜனுடைய கழுத்தில் குந்தி தேவி மாலையைப் போட்டாள். விவாகம் பூர்த்தி பெற்றுக் குந்தி தேவி பாண்டு மகாராஜனுடன் ஹஸ்தினாபுரம் சென்றாள்.

இராஜ வம்ச வழக்கத்தின் படியும் பீஷ்மருடைய யோசனையின் படியும் பாண்டு ராஜன் சில நாள் கழித்து மத்ர ராஜனுடைய சகோதரி மாத்ரியையும் இரண்டாவது மனைவியாகக் கொண்டான். புத்ரோத்பத்தியைப் பற்றிய கவலைக்காக அக் காலத்தில் இவ்வாறு அரசர்கள் பல மனைவிகளைக் கொள்வது வழக்கம்; சிற்றின்பத்திற்காக அல்ல.

பாண்டுராஜன் ஒரு நாள் காட்டில் வேட்டையாடும் போது மான் உருவம் கொண்டிருந்த ஒரு ரிஷியை அம்பு எய்து கொன்று விட்டான். அந்த ரிஷி உயிர் நீங்கும் தறுவாயில் பாண்டுவைச் சபித்து விட்டார். "பாதகனே! உன் மனைவியுடன் நீ கலந்தால் தட்சணம் உனக்கு மரணம் உண்டாகும்" என்று பாண்டு மகாராஜன் ரிஷியினால் சாபம் விதிக்கப்பட்டான். இந்தத் தண்டனையைப் பெற்ற பாண்டு மனம் கலங்கிப் போய் பீஷ்மரிடமும் விதுரனிடமும் ராஜ்ய பரிபாலனத்தை ஒப்படைத்துவிட்டுத் தன் மனைவிகளை அழைத்துக் கொண்டு வனத்திற்குப் போய் விட்டான். அங்கே பிரம்மசரிய விரதம் பூண்டு வசித்து வந்தான்.

சந்ததியில்லாமல் உயிர் நீத்துவிடக் கூடாது என்று பாண்டுராஜனுடைய வேண்டுகோளின் மேல் குந்தியும் மாத்ரியும் துருவாசரிஷி உபதேசித்த மந்திரத்தின் மூலமாகத் தேவர்களை வேண்டிக் கொண்டு பஞ்ச பாண்டவர்களைப் பெற்றார்கள். இவர்கள் வனத்திலேயே பிறந்து வனத்திலேயே தபஸ்விகளுக்கிடையில் வளர்ந்து வந்தார்கள்.

மனைவிகளுடனும் புத்திரர்களுடனும் நியமங்களைக் காத்து வனத்தில் வசித்து வந்த பாண்டு ராஜன் ஒரு நாள் வசந்த காலத்தில் இயற்கை வேகத்தால் இழுக்கப்பட்டுப் புத்தி தடுமாறிப் போய் மாத்ரியுடன் கலந்தான். அவள் தடுத்தும் கேட்காமல் மதி மயங்கிப் போய் இவ்வாறு செய்து விட்டான். உடனே ரிஷியின் சாபத்தின்படி உயிர் நீத்தான்.

அரசன் மரணத்திற்குத் தானே காரணமானதை நினைத்து மாத்ரி துக்கம் பொறுக்கமாட்டாமல் பாண்டுவைத் தகனம் செய்யும் காலத்தில் தானும் எரியும் சிதையில் விழுந்து மாண்டாள். அந்த வனத்தில் இருந்த ரிஷிகள் தீராத துக்கத்தில் மூழ்கிக் கிடந்த குந்திதேவியையும் பாண்டவர்களையும் ஹஸ்தினாபுரத்திற்கு அழைத்துக்கொண்டு போய் பீஷ்மரிடம் ஒப்புவித்தார்கள். அப்போது யுதிஷ்டிரனுக்கு வயது பதினாறு.




# குந்திதேவி

பாண்டவர்களுடைய தாயார் குந்திதேவி. கண்ணனுடைய பாட்டனும் யாதவ குல சிரேஷ்டனுமான சூரனுடைய மகள். இவளுக்குப் பெற்றோர் வைத்த பெயர் பிருதை. அழகிலும் குண விசேஷங்களிலும் உலகப் பிரசித்தமாயிருந்தாள். தன் அத்தை மகனான குந்திபோஜனுக்குச் சந்தானம் இல்லாதிருந்தபடியால் சூரன் தன் மகள் பிருதையைச் சுவீகார மகளாகக் கொடுத்தான். முதல் குழந்தையைக் கொடுப்பதாக முன்னமே நிச்சயித்திருந்தபடியால் தன் முதல் குழந்தையான பிருதையை அவ்வாறு கொடுத்தான். அதன் பின்னரே அவள் குந்திதேவி என்று அழைக்கப்பட்டு வந்தாள்.

குந்தி சிறு பெண்ணாக இருந்த காலத்தில் தகப்பனார் கிருகத்துக்கு அதிதியாக வந்த துருவாச மகரிஷிக்கு மிகவும் பொறுமையுடனும் கவனத்துடனும் ஒரு வருஷ காலம் பணிவிடை செய்து பூஜித்து வந்தாள். அவர் மிக்க மகிழ்ச்சியடைந்து ஒரு திவ்விய மந்திரத்தை அவளுக்கு உபதேசித்தார். "இந்த மந்திரத்தைச் சொல்லி நீ எந்த தேவதையை எண்ணி அழைக்கிறாயோ அந்த தேவதை வந்து தன்னுடைய தனி மகிமையைக் கொண்ட ஒரு புத்திரனை உனக்குத் தருவான்" என்று வரம் தந்தார். பின்னால் இவள் புருஷனுக்கு நேரிடப் போகிற ஆபத்தை ஞானக் கண்ணால் அறிந்து துருவாசர் இந்த வரத்தைத் தந்தார்.

சிறு பெண்ணுக்குத் தான் பெற்ற மந்திரத்தை உடனே பரிக்ஷை செய்யவேண்டுமென்று எண்ணம் தோன்றிற்று. ஆகாயத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்த சூரியபகவானை எண்ணி மந்திரத்தைச் சொன்னாள். உடனே வானம் மேகங்களால் மறைந்தது. அழகிய உருவத்துடன் பகவான் சூரியன் ஒளி வீசிக்கொண்டு விசாலாட்சியான குந்தியிடம் வந்தான். பிரியமாக நோக்கி நின்றான். இந்த அற்புதத்தைக் கண்ட குந்தி திகைத்துப் போய், "பகவானே! நீர் யார்?" என்றாள்.

"பிரியமானவளே! நான் ஆதித்தன். புத்திரலாபம் கொடுக்கும் மந்திரத்தைக் கொண்டு நீ ஏவியபடியால் வந்தேன்" என்றான் சூரிய பகவான்.

குந்திதேவி நடுங்கி, "நான் பிதாவுக்கு உட்பட்ட கன்னிகை. துருவாச ரிஷி கொடுத்த வித்தையைப் பரிட்சை செய்யத்தான் நினைத்தேன். என் பிழையைப் பொறுத்துக் குற்றத்தை மன்னிக்க வேண்டும்" என்றாள். மந்திரத்தின் வசீகர சக்தியின் பயனைச் சூரிய பகவானுக்குத் திரும்பிப்போக முடியவில்லை. பலவகையாக அன்பு பாராட்டிப் பழி[illegible] அஞ்சி நின்றவளுக்குத் தைரியம் சொ[illegible] வற்புறுத்தினான்.

"ராஜகுமாரியே! பயப்பட வேண்டாம். என் அனுக்கிரகத்தினால் உனக்கு ஒரு குற்றமும் வராது. என்னைவிட்டுப் பிரிந்ததும் நீ மறுபடியும் முன்போல் பூரண கன்னியாகி விடுவாய்" என்று சொன்னான்.

உலகத்திற்கு ஒளியும் உயிரும் தருபவனான ஆதித்தன் குந்திக்குக் கருப்பத்தைத் தந்துவிட்டான். அதன் பயனாக வீரனும், ஆயுதம் தரித்தவர்களில் சிறந்தவனும், சூரியனைப்போன்ற ஒளியும் அழகும் பொருந்தினவனும், உடலோடு உடன் பிறந்த கவசமும் குண்டலங்களும் தரித்தவனுமான கர்ணனைக் குந்தி பெற்றாள். பெற்றபின் சூரிய பகவானின் வரத்தின்படி மறுபடியும் கன்னி நிலையை அடைந்து விட்டாள்.

குழந்தையை என்ன செய்வது என்று யோசித்து, தன் குற்றத்தை மறைப்பதற்காக ஒரு பெட்டியில் சிசுவை வைத்துப் பத்திரமாக மூடி ஜலத்தில் விட்டு விட்டாள். தண்ணீரில் மிதந்து கொண்டிருந்த அந்தப் பெட்டியைத் தேரோட்டி ஒருவன்

# "கல்கி" சிறு கதைப் போட்டி

## பரிசு ரூ. 1000

முதல் பரிசு ரூ. 500 ; ஐந்து பரிசுகள் ஒவ்வொன்று ரூ. 100

1. தமிழ் நாட்டில் அதிசயமான இலக்கிய மறு மலர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. "எழுத வேண்டும்" "எழுத வேண்டும்" என்று எத்தனையோ இளம் எழுத்தாளர்கள் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய ஊக்கமும் உற்சாகமும் நல்ல முறையில் பயன்படுமாறு "கல்கி" இந்தச் சிறு தொண்டைச் செய்ய முன்வந்திருக்கிறது.

2. இந்தப் பரிசுத் திட்டத்துக்காக அனுப்பப்படும் கதைகள் தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக்கொண்ட புதுக் கற்பனைகளாக இருக்க வேண்டும். மொழிபெயர்ப்புக்களும், தழுவி எழுதிய கதைகளும் இந்தப் பரிசுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டா.

3. கதையின் நீளம் "கல்கி"யில் ஐந்து பக்கம் முதல் பன்னிரண்டு பக்கத்துக்குள் அடங்குவதா யிருக்க வேண்டும்.

4. ஒரே ஆசிரியர் இரண்டு கதைகள் அனுப்பி வைக்கலாம். அதற்கு மேல் அனுப்பக்கூடாது.

5. 1944-ம் வருஷம் ஏப்ரல்மீ 30உக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். கவரின் மேல் "சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

6. பின் வரும் தமிழன்பர்கள் அடங்கிய பஞ்சாயத்தார் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பார்கள். அவர்களுடைய தீர்ப்பே முடிவானது.

   1. ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார்.
   2. ஸ்ரீமதி எஸ். அம்புஜம்மாள்
   3. கே. சந்திரசேகரன், பி. ஏ., பி. எல்.
   4. க. நா. சுப்பிரமண்யம் ("சூறாவளி" ஆசிரியர்)
   5. ஆசிரியர், "கல்கி"

7. எல்லாவற்றிலும் சிறந்ததென்று பஞ்சாயத்தார் கருதுகிற கதைக்கு முதல் பரிசு ரூ. 500 அளிக்கப்படும். அடுத்தபடியாக ஐந்து கதைகளுக்கு ஒவ்வொன்றுக்கும் ரூ. 100 வீதம் அளிக்கப்படும். பரிசு பெற்ற கதையின் 'காபிரைட்' உரிமை "கல்கி" காரியாலயத்தைச் சேர்ந்தது.

8. பரிசு பெறாத கதைகளில் பிரசுரத்துக்குத் தகுதியான கதைகள் பிரசுரத்துக்கு எடுத்துக்கொள்ளப்படும். அவற்றுக்கு உசிதமான சன்மானம் வழங்கப்படும். பரிசு பெறாமல் பிரசுரத்துக்கு மட்டும் எடுத்துக் கொள்ளப்படும் கதைகளின் 'காபிரைட்' உரிமை கதை ஆசிரியர்களுடையது.

9. முதற் பரிசு பெற எந்தக் கதையும் தகுதியற்றதென்று பஞ்சாயத்தார் கருதினால், முதற் பரிசுத் தொகை பஞ்சாயத்தாரின் உசிதம்போல் பிரித்துக் கொடுக்கப்படலாம்.

10. இந்தப் போட்டி சம்பந்தமான விதிகளை மாற்றவும், திருத்தவும் "கல்கி" ஆசிரியருக்கு உரிமை உண்டு.

11. சந்தேகம் ஏற்படும் எந்த விஷயத்திலும் "கல்கி" ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

தி. சதாசிவம்

மானேஜர், "கல்கி"

# வட்டமேஜை

டெல்லி,
15—3—44.

சமீபத்தில் டெல்லி கர்நாடக சங்கீத சபையார் ஒரு சங்கீதத் திருவிழாவை ஏற்படுத்தி டெல்லியைச் சங்கீத சாகரத்தில் மூழ்கடித்தனர் என்னும் செய்தி தமிழ் நாட்டுச் சங்கீதாபிமானிகளுக்கு மகிழ்ச்சி யளிக்குமென்று நம்புகிறேன்.

முதலாவதாக பிப்ரவரி 24உ, ஜி. என். பி. அவர்கள் ஸ்ரீ ராஜமாணிக்கம் மணியுடன் அமோகமாகப் பாடினார். அன்று அவருடைய சாரீரம் மிகவும் நன்றாக அமைந்திருந்தது. அவர் பாடிய சுருட்டி, தோடி ராகங்கள் அபூர்வமாக இருந்தன. நிசப்தமான இரவில் ஸ்ரீ ராஜமாணிக்கத்தின் இன்னிசை சபையோரை மெய் மறக்கச் செய்தது. பாலக்காட்டு மணியோ டெல்லிக்கு மிகவும் அபூர்வ வஸ்து. அநேக வருஷங்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் டெல்லி விஜயம் செய்தார். அன்று மூன்று தடவை தனி ஆவர்த்தனம் வாசித்தார். அவருக்கு நிகர் அவரே என்று ஊர்ஜிதம் செய்தார்.

அடுத்தபடியாக, மார்ச் 5உ, ஸ்ரீ வி. வி. சடகோபன் கச்சேரி செய்தார். அவருடைய சாரீரம், அதிசீக்கிரத்திலே டெல்லி வரப்போகும் அரியக்குடி ராமானுஜய்யங்காரின் சாரீரத்தை ஞாபகப்படுத்தியது. அவருடைய சாரீர சுகமும் சங்கீதத் தேர்ச்சியும் அவர் பாடிய சாவேரி காம்போதி ராகங்களில் நன்றாக விளங்கின. இவர் பிலஹரி ராகத்தில் பாடிய "கனவிலும் நினைவிலும்" என்ற தமிழ்ப் பாட்டும், காம்போதி ராகத்தில் பாடிய "இவன் யாரோ?" என்ற தமிழ்ப் பாட்டும் சபையோர்களின் விருப்பத்துக்கு உகந்தனவாக இருந்தன. பாலக்காடு கிருஷ்ணமணி விருவிருப்பாக மிருதங்கம் வாசித்துச் சபையை மகிழ்வித்தார்.

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி மார்ச் 12உ நடைபெற்றது. என்னுடன் கூட கச்சேரி கேட்ட வட இந்திய நண்பர் "I see the entire Tamil Nad here" என்று சொன்னபடி, டெல்லி, சிம்லா, டெராடூன், மீரட், கான்பூர் முதலிய இடங்களில் உள்ள தென்னிந்தியர்கள் ஒரே ஜன சமுத்திரமாக, ஜகஜ்ஜோதியாக விளங்கிய பந்தலில் அமைதியாகக் கூடி இருந்தார்கள். ஆபோகி, பந்துவராளி, ஸரஸ்வதி மனோஹரி முதலிய ராகங்களில் சில கீர்த்தனங்கள் பாடிய பிறகு, சங்கராபரண ராகத்தை எடுத்து மேல் ஸ்தாயியில் பாடிய பொழுது சபையோர்கள் ஒரே ஆனந்த பரவச மடைந்தனர். "தூக்கிய திருவடி" என்ற கீர்த்தனமும் "எத்தனையோ பிறவி எடுத்திளைத்தேன்" என்ற இடத்தில் நிரவலும் மிக அழகாக இருந்தன. கல்யாணி ராகம் என்றால் எம். எஸ். என்று சொல்வதற்கு ஏற்க, அந்த ராகத்தை ஓர் அலசு அலசி, "நீது சரண பங்கஜ" என்ற கீர்த்தனத்தை அழகாகப் பாடினார். பல்லவிக்குப் பிற்பாடு பாடிய மூன்று ஹிந்திப் பாட்டுகளும் அங்கு கூடியிருந்த வடக்கிந்தியர்களால் மிகவும் ரஸிக்கப்பட்டன. வைஸ்ராய் நிர்வாக சபை மெம்பர். டாக்டர் கரே, மெய் மறந்து மூன்று மணி நேரத்துக்கு மேல் கச்சேரி கேட்டுக் கொண்டிருந்தது குறிப்பிடத் தக்கது.

தமிழ் நாட்டிலிருந்து ஆயிரம் மைல்களுக்கு அப்பால் வந்திருக்கும் டெல்லி தென்னிந்தியர்கள் அழைக்கும் போதெல்லாம் வந்து கச்சேரி செய்து சங்கீதானந்தத்தைத் தரும்படி தமிழ் நாட்டுக் கர்நாடக சங்கீத வித்வான்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

எஸ். கே. ராமநாதன்,
பொக்கிஷதார்,
கர்நாடக சங்கீத சபை, டெல்லி.

# மயிலை சங்கீத சபை

தென்னாட்டில் சிலகாலமாகத் தோன்றியிருக்கும் அபரிமிதமான சங்கீதப் பிரேமையினால், சங்கீதக் கலை வளர்ந்து வருவதோடு கூட, அச்சுக்கலையும் வளர்ந்து வருகிறது என்பது மயிலை சங்கீத சபையார் வெளியிட்டிருக்கும் சங்கீத விழாப் புத்தகத்திலிருந்து வெளியாகிறது.



நமது "கல்கி" பத்திரிகையைப்போல் மயிலாப்பூர் சங்கீத சபையும் பிறந்து வளர்வதற்குப் பதிலாக, வளர்ந்தே பிறந்த சபை என்று தோன்றுகிறது. இந்த சபை தோன்றி ஐந்து மாதத்திற்குள்ளாக தடபுடலான சங்கீத விழா நடத்துகிறார்கள் என்பதே அதற்கு அத்தாட்சியாகும். மேற்படி சங்கீத விழாவில் மகாராஜபுரம், அரியக்குடி, செம்பை, மதுரை மணி, ஜி. என். பி, எம். எஸ். ஆகியவர்களின் பாட்டுக் கச்சேரிகளோடு, ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் பரத நாட்டியமும் நடைபெறுகிறது. கச்சேரிகளின் நிகழ்ச்சி விவரங்கள் அந்தந்தக் கலைஞர்களின் படங்களுடன் வெகு அழகாக இப் புத்தகத்தில் அச்சாகியிருக்கின்றன.

மயிலை சங்கீத சபை இவ்வளவு துரிதமாக முன்னேற்ற மடைந்திருப்பதின் காரணம், நிர்வாகத் திறமைக்குப் பெயர்போன இரண்டு ஐ. ஸி. எஸ். ரஸிகர்கள் இதில் தலைமை வகிப்பதுதான் என்று தெரிய வருகிறது. அக்கிராசனர் ஸ்ரீ எஸ். வெங்கடேசுவரன் ஐ. ஸி. எஸ்., உப அக்கிராசனர் ஸ்ரீ ஸி. வி. நரசிம்மன் ஐ. ஸி. எஸ். இவர்களுடைய படங்களையும் இப் புத்தகத்தின் முகப்பில் காண்கிறோம். முதல் நாள் கச்சேரியில் ஸ்ரீ ஸி. வி. நரசிம்மன் பேசியபோது, புரோகிராம் புத்தகம் வெகு அழகாயிருக்கிறதென்றும், எட்டணா கண்ணை மூடிக்கொண்டு கொடுக்கலாமென்றும், ஆனால் தம்முடைய படமும் அக்கிராசனர் படமும் இல்லாமலிருந்தால் ஒரு ரூபாய் கொடுக்கலாமென்றும் கூறியதாக அறிகிறோம். அப்பேர்ப்பட்டவர்களுடைய படங்களை இங்கே நாம் வெளியிட்டிருந்த போதிலும், அதற்காகக் "கல்கி"யின் விலையைக் குறைக்கவில்லையென்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



மயிலை சங்கீத சபையானது இன்னும் வளர்வதற்கு இடமுள்ள வரையில் வளர்ந்து நல்ல முறையில் கர்நாடக சங்கீதத்தையும் வளர்க்குமென்று நம்புகிறோம்.

பெரியவாள் கதை—10

# எளிய நடை

ஸ்ரீ சுத்தானந்த பாரதி

அந்தக் காலத்தில் ஸ்ரீ வ. வெ. சு. ஐயர் பேரில் சிலருக்கு மனக்கசப்பு உண்டு. சில பழம் புலவர்களுக்கு அவர் பெயரைச் சொன்னால் உதடு துடிக்கும். கம்ப ராமாயணத்தைப் பதம் பிரித்து அச்சிட்டது சிலருக்குப் பிடிக்கவில்லை. "பால பாரதி" பத்திரிகையின் நடையை ஐயரின் மணிப் பிரவாளம் என்று கேலி செய்தவரும் உண்டு. ஐயர் எழுதிய "காவிய உத்தியானம்" ஒருவருக்குப் பிடிக்கவில்லை. அவர் ஐயருக்குக் கடுமையான தனித் தமிழில் ஒரு முடங்கலைத் தீட்டிவிட்டார். அம் முடங்கலை ஐயர் இரண்டு வரி படிக்கச் சொல்லிக் கேட்டார்:—"ஐயன்மீர், நீவிர், இற்றை ஞான்று, நந்தொல் இலக்கண மரபிற்கு மாறாக, நுமது கட்டுரையின்கண் வழூஉச்சொற் புணர்த்தலும், தூய தமிழொரீஇ வடசொற்களை மிகுதியாக விரவச் செய்தலும் பிற்றை ஞான்று நந்தாய் மொழிக்கு....... இதேனெனக் கடாவுதல் கற்றறிந்த எங்கள் கடன்......" ஐயர் 'ஊஹூம்' என்றொரு விநயப் புன்னகை புரிந்து அந்தக் கடிதத்தை அப்புறம் வைத்துவிட்டார். விட்டாரா புலவர்! அவர் ஐயரைத் தேடிக்கொண்டு வந்துவிட்டார். "யாம் தங்களுடன் வாதாடித் தமிழின் கற்பைக் காக்க வந்துள்ளோம்" என்றார் புலவர்.



மகரிஷி வ. வெ. சு. ஐயர்

ஐயர்:—புலவரே! வாரும், இரும். நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டுப் பிறகு தங்கள் ஆக்ஷேபணையை நிதானமாகச் சொல்லும். நமது நாட்டில் நூற்றுக்குப் பத்துப்பேரே எழுத்தறிந்தவர்கள். கல்வியறிவும், விஷய ஞானமும் நம்மிடையே எவ்வளவோ பரவவேண்டும். அதற்கு எல்லாரும் தெரிந்துகொள்ளும்படியான சுலபமான நடையில் நிரம்ப நூல்கள் வரவேண்டும். எளிய நடையில் தேச பக்தியையும் சாஸ்திர ஞானத்தையும் பரப்ப வேண்டும். நாம் எழுதுவது எல்லாருக்கும் தெரிந்த பாஷையானால் தான் படிப்பு அதிவேகமாகப் பரவும்.

புலவர்:—நீவிர் எழுதிய காவிய உத்தியானம் போலத்தான் பேசுகிறீர்.

ஐயர்:—பேச்சும் எழுத்தும் ஒன்றாகிவிட்டால் தமிழுக்கு க்ஷேமம்.

புலவர்:—இஃது எமக்கு உடன்பாடன்று; யாம் ஒப்பேம் ஒப்பேம். எமது தமிழே தமிழ். கலப்புத் தமிழ் மாக்களைப் பொருளறியாப் போலிகளாக்கும்.

ஐயர்:—புலவரே! அதிகம் பேச நேரமில்லை; இதோ பரீக்ஷை செய்வோம்.

ஐயர் ஒரு பையனிடம் புலவர் கடிதத்தைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். பையன் திணறி மூச்சு வாங்கி, "ஐயா! ஒன்றும் புரியவில்லையே!" என்று திகைத்தான். உடனே காவிய உத்தியானத்தைத் தந்து படிக்கச் செய்தார். பையன் - தட தடவென்று படித்து விஷயத்தைச் சொன்னான்.

"இதுதான் எளிய நடையின் மகத்துவம்" என்றார் ஐயர்.

புலவர் அசட்டுச் சிரிப்புடன் "அதுவுந் தகவே!" என்று கூறிச் சென்றார். ஐயரும் பாரதியாரும் எளிய இனிய தமிழ் நடையில் உயர்ந்த அறிவுப் பணி செய்தனர். அவர்களைப் போலவே இன்று எல்லாருக்கும் புரியும் தமிழில் நகைச் சுவை ததும்ப விஷயங்களை விளக்கும் "கல்கி" அரிய தமிழ்ப்பணி செய்து வருகிறது. கல்கி வாரப் பத்திரிகையாக வெளி வரும் இந்த நாள் மேற்கூறிய பழைய சம்பவம் நினைவிற்கு வந்தது.

**எல்லாரும் போற்றும் எளிய நடையெழுத**
**வல்லாரே நல்லகலை வாணரவர்—சொல்லாலே,**
**நாடு விழித்தெழுந்து நாளுந் திருவோங்கும்**
**ஏடுஞ் சுவைக்கும் இனிது.**




மகத்தான

# 2-வது வாரம்

கொல்லம்

லாயர்

தியேட்டரில்

(உரிமையுள்ளது)

ஆச்சர்யமான காட்சிகள்

அபூர்வ சீன்கள்-உடைகள்

அற்புதப் பாடல்கள்

அழகிய நடனம் - நடிப்பு

யாவும் நிறைந்த

ஒரு அரிய

கலா விருந்து.



# ஐயப்பன்

29 - 3 - 44

புதன்கிழமை முதல்

பிரதி தினமும் நடைபெறுகிறது

செல்லும் இடந்தோறும்

ஆனந்தமான வரவேற்பு.

பட்டுப் பூச்சி டான்ஸ் ஒரு அற்புதம்.



உரிமையுள்ள
நாடகங்கள் :

சக்தி லீலா,

இன்பசாகரன்,

ஏகநாதர், பிரபலச் சந்திரா,

பிரேம குமாரி முதலியன.

---

நாடகக் கலையரசு, நாடகக்
கலாநிதி, நாடக கேசரி, நவாப்

டி. எஸ். ராஜமாணிக்கம்,

புரோப்ரைட்டர்.



யப் பேச்சினாலும் நம் பாராட்டைப் பெறுகிறவர் போலீஸ் இன்ஸ்பெக்டர். ஒரு கணத்துக்கு முன்னர் பூனைபோல் சாதுவாகப் பேசிக் கொண்டிருக்கிறவர் அடுத்த கணமே புலிபோல் பாய்வது மிகவும் குறிப்பிடத்தக்கது.

லக்ஷ்மிகாந்தன் நன்றாகவே நடிக்கிறார். ஆனால் அதே லக்ஷ்மிகாந்தன் ரங்கூன் கமலமாக மாறும்போது நடிப்பு இன்னும் ஜோராக இருக்கிறது.

வேலைக்கார ராமனைப் பற்றியும், வேலைக்காரி அலமுவைப் பற்றியும் இரண்டு வார்த்தை சொல்லத்தான் வேண்டும். இரண்டு பேரும் சபையோரைச் சிரிப்பாய்ச் சிரிக்க அடிக்கிறார்கள். ஆனால் ஒரு வித்தியாசம். வேலைக்கார ராமன் வாயைத் திறந்தால்தான் ஜனங்கள் சிரிக்கிறார்கள். ஆனால் வேலைக்காரி அலமுவோ, உடம்பைக் குலுக்கிக் கொண்டு மேடையில் சற்று தலையைக் காட்டினால் போதும், கொட்டகையில் ஒரே சிரிப்புத்தான்.

## வெற்றி இரகசியம்

★ இந்த நாடகம் இவ்வளவு வெற்றி யடைந்திருப்பதின் பெருமையில் முக்கால் வாசிக்குமேல் எந்த அம்சத்தைச் சேரவேண்டுமென்றால், சந்தேகமின்றி நாடக பாத்திரங்களின் சாதுர்யமான சம்பாஷணையைத்தான்.

ஆங்கிலத்தில் வோட் ஹவுஸ் என்னும் பிரசித்த நகைச்சுவை ஆசிரியரின் கதைகளில், கதா பாத்திரங்கள் பேசும்போது, வார்த்தைக்கு வார்த்தை புதுப் புது அதிசயத்தையும் புதுப் புது ஹாஸ்யத்தையும் கண்டிருக்கிறோம். அந்த வோட் ஹவுஸைத் தலைகீழாய்ப் புரட்டி முதுகுக்கு மண் காட்டும்படியாக இந்த நாடகத்தின் சம்பாஷணைகள் அமைந்திருக்கின்றன.

நல்ல 'டெம்போ' உள்ள சினிமாப் படத்தைப்போல் விறு, விறு என்று காட்சிகள் வெகு வேகமாகச் செல்கின்றன.

இரண்டாவது காட்சி, அதாவது சாரதா குழந்தையைக் கொன்றுவிட்டுத் தன்னையும் கொன்றுகொள்ளப் பார்க்கும் காட்சி ஒன்று மட்டும் அனுமார் வால்போல் வளர்ந்து கொண்டே போய்ச் சற்று அலுப்புத் தட்டுகிறது. ஆனால் யாருக்கும் செத்துப் போவதென்றால் மனது கஷ்டமாகத்தான் இருக்கும். சற்று நீண்ட நேரம் யோசிக்கத்தான் செய்வார்கள். நமக்கு அலுப்புத் தட்டுகிறதே யென்று அவர்கள் அவசரப்பட முடியுமா?



"எனக்குக் கோபம் வந்துச்சுன்னா, அப்புறம் நான் பொம்பிளை இல்லே!"



இன்ஸ்பெக்டர்

மொத்தத்தில், இந்த "லக்ஷ்மிகாந்தன்" என்னும் நாடகம், தமிழ்நாட்டின் நாடகக் கலைத் திறமையைப் பற்றி நமக்குப் பெருமை யூட்டுவதாயிருக்கிறது. தமிழ் மக்களுக்குத் தங்களுடைய குறைபாடுகளைப் பார்த்துத் தாங்களே சிரிக்கும் சக்தி உண்டு என்பதை நிரூபிக்கிறது. தமிழர் சமூகத்தைக் கதாநாயகி என்னதான் நிந்தித்தாலும், அந்த சமூகத்தில் இன்னும் ஜீவ சக்தி உண்டு என்பதற்கு இந்த நாடகம் அறிகுறியாகும்.

தமிழ்நாட்டில் நாடகக் கலை அழிந்து போகாமல் காப்பாற்றி வரும் பெருமையில் மதுரை ஸ்ரீ மங்கள பால கான சபைக்கும் பங்கு உண்டு.



"ஆபீஸ் தூங்கறபோதுதான் நானும் தூங்கறேன்!"



"பெண் மதியால் மோசம் போனேன்"

தனும் சேர்ந்து கொண்டு, 'மூட்டை அடிக்கிற பாங்கி' ஒன்று வைக்கிறார்கள். பாங்கியில் வேலைக்கு வந்தவர்கள் ஏமாந்து கொடுத்த ஜாமீன் தொகையைச் சுருட்டிக்கொண்டு ஓடுகிறார்கள்.

சப் இன்ஸ்பெக்டர் சுப்பராவ் இவர்களைத் தொடர்ந்து கொண்டே இருக்கிறார். இன்ஸ்பெக்டருக்கு உதவியாக லக்ஷ்மிகாந்தனின் இன்னொரு சிநேகிதனை சிகாமணி என்னும் அயோக்ய சிகாமணி சேர்கிறான். லக்ஷ்மிகாந்தன் அநேக தடவைகள் வெகு சாமர்த்தியமாக இன்ஸ்பெக்டருக்கு டிமிக்கி கொடுக்கிறான். ஆனால் பலநாள் திருடன் ஒரு நாள் அகப்படுவான் அல்லவா? அப்படியே அகப்பட்டுக் கொள்ள, இருவரும் சிறையில் வைக்கப் படுகிறார்கள். ஒரு நாள் சாப்பாட்டுக்குச் செல்லுகையில், இருவரும் தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள். இன்ஸ்பெக்டர் சுடுகிறார். லக்ஷ்மிகாந்தன் குண்டுபட்டு இறக்கிறான். கோவிந்தன் தப்பித்துக் கொள்கிறான். லக்ஷ்மிகாந்தன் இறந்ததைக் கேட்டு, சாரதா துக்கத்தினால் உயிர் விடுகிறாள். கதையின் ஆரம்பத்தில் பாடிக்கொண்டு வந்த குருட்டுப் பிச்சைக்காரன் திரும்பவும் பாடிக்கொண்டு வருகிறான்.



"டெயிலர் கடைப் பொம்மை"



"ரெங்கூன் கமலம்"

இதுதான் கதை. இந்தக் கதையின் ஆரம்பத்தில் வரும் குழந்தைக் கொலையையும், கடைசியில் வரும் விதவாசிரமத்தையும் நீக்கி விட்டு, சாரதாவை லக்ஷ்மிகாந்தனின் சொந்த மனைவியாக வைத்திருந்தாலும், நாடகத்தின் சிறப்பு எவ்விதத்திலும் குறைந்திராது.

## நடிப்பும் நடிகர்களும்

★ நடிகர்களுக்குள் முதல் பிரைஸ் சந்தேகமின்றி கோவிந்தனுக்குத்தான். நாடகத்தின் கடைசியில் கோவிந்தன், சிகாமணியிடம், "என்னை யார் என்று நினைத்துக் கொண்டாய்? நான் சிங்கக் குட்டி கோவிந்தனுக்கும்!" என்று மார் தட்டுகிறான். உண்மையில் கோவிந்தன் நடிப்புத் திறமையில் சிங்கக் குட்டிதான்.

நாடகத்தில், நமக்குப் பாதி வயிற்று வலிக்குப் பொறுப்பாளி மேற்படி ஆசாமியே யாகும். மோசடி பாங்கியில் இவர், பாவம், அந்த அசமஞ்சிகளான பி. ஏ. யிடமும், எம். ஏ. யிடமும் டெபாஸிட் பணம் பறிக்கும் காட்சி வெகு ஜோர்! அந்த இரண்டு அசடுகளிடமும் அவர் போடும் கேள்விகளும், அவர்களிடம் இவர் காட்டும் ஜபர்தஸ்த்தும், தமக்கு ஆங்கிலம் தெரியாது என்னும் 'குட்டு' உடைபடாமல் பார்த்துக் கொள்ள அவர் படும் சிரமமும், —இப்பொழுது நினைத்துக் கொண்டாலும் சிரிப்பு வருகிறது.

சாயபு வேஷம் தரித்து இவர் வேலைக்காரி அலமுவிடம் காட்டும் அட்டகாசமும், சீமைக் கமலம் வேஷம் தரித்து இன்ஸ்பெக்டர் ஐயாவை இஞ்சி தின்ற குரங்குபோல் இளிக்க வைத்துக் கூத்தடிக்கும் கொம்மாளமும் நம் ஞாபகத்தை விட்டு அகலவே அகலா.

கோவிந்தனுக்கு அடுத்தபடியாகத் தம்முடைய இயற்கை நடிப்பினாலும், ஹாஸ்



# ஆடல் பாடல்



## சிரிக்க முடியுமா?

★ ஜப்பான் யுத்தத்திலும், அரிசி, விறகுப் பஞ்சத்திலும், விற்பனை வரி, வருமான வரி, பாக்கு வரி, புகையிலை வரி முதலியவற்றிலும் ஒரே சோகத்தில் மூழ்கி யிருக்கும் ஜனங்களைச் சிரிக்க வைக்க முடியுமா என்று கேட்டால், சிரிக்க வைக்க முடியும், குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைக்கவும் முடியும், சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாகும்படி செய்யவும் முடியும் என்று பதில் கூறலாம். இதைப் பற்றிச் சந்தேகம் இருந்தால், சென்னை ஒற்றைவாடை நாடகக் கொட்டகையில் மதுரை ஸ்ரீ மங்கள பால கான சபையினரால் நடத்தப்படும் "லக்ஷ்மிகாந்தன்" நாடகத்தைப் பார்த்துச் சந்தேகம் தீரலாம்.

அப்பா! நாம் சிரிக்க வேண்டும் என்பதற்காக மேற்படி நாடகக் கம்பெனியார் என்னவெல்லாம் பண்ணுகிறார்கள்! நாடகத்தின் ஆரம்பத்திலேயே பாங்கி முதலாளியைச் சுடுகிறார்கள். கதாநாயகியை பால்யத்திலேயே விதவையாக்குகிறார்கள்; கதாநாயகியின் குழந்தையைக் கொல்லுகிறார்கள். பிறகு கதாநாயகியையும் தற்கொலை செய்துகொண்டு சாகடிக்கப் பார்க்கிறார்கள். பின்னர் கோவிந்தனைச் சந்தோஷத்தினால் நாற்காலியுடன் கீழே விழச் செய்கிறார்கள். இதற்குப் பிறகு மாடி வீட்டை வெடி குண்டினால் தகர்த்து, லக்ஷ்மிகாந்தன் தலையையும், கையையும் ஒடிக்கிறார்கள். வேலைக்காரன் ராமுவைச் சவுக்கினால் வெளுத்து வாங்குகிறார்கள். கடைசியில் கதாநாயகனையே கொன்று சமாதி கட்டுகிறார்கள்!

### கதைப் போக்கு

★ சாரதா என்னும் பெண், "சிற்றாடை கட்டத் தெரியாத சின்னஞ் சிறு வயதில் பொற்தாலி அணிந்து" ஒருவனுக்கு வாழ்க்கைத் துணைவி ஆகி, கன்னிப் பருவத்திலேயே கணவனை இழக்கிறாள். பிறகு இயற்கையின் விகாரத்தினால், யாரோ ஒருவர் வீசிய வலையில் சிக்கி, ஒரு குழந்தைக்குத் தாயாராகிறாள். உலக அவதூறுக்குப் பயந்து குழந்தையைக் கொன்றுவிட்டுத் தானும் தற்கொலை புரிந்து கொள்ளப் போகும் சமயத்தில் லக்ஷ்மிகாந்தன் என்னும் பாங்கி கிளார்க்கினால் காப்பாற்றப்பட்டு அவனுடன் வாழச் சம்மதிக்கிறாள். (இவன் நல்ல சமயத்தில் வந்து காப்பாற்றினானோ, அந்த மேடையில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அட்டை மரமும் உடையாமல் பிழைத்ததோ! சாரதா மரத்தில் துணியைக் கட்டி விட்டுச் சபையோரை நோக்கிப் பிரசங்கம் புரிந்து கொண்டிருந்த அத்தனை நேரமும் என்னுடன் கூட வந்திருந்த நண்பருக்கு எங்கே அந்த அட்டை மரம் உடைந்து விழுந்து விடப் போகிறதோ என்று பயம்!)

அப்பொழுதுதான் லக்ஷ்மீகாந்தன் தன் பாங்கி முதலாளியைச் சுட்டு விட்டு இரும்புப் பெட்டியிலிருந்து பத்தாயிரம் ரூபாயைக் களவாடிக் கொண்டு வந்திருக்கிறான்.

லக்ஷ்மிகாந்தனும், அவன் நண்பன் கோவிந்



"க்யா லடுகி, கைஸீ ஹை?"

பிரிட்டனும், ருஷியாவும், அமெரிக்காவும் தனித் தனியாகப் பிரிந்து காரியம் செய்கிறதாக வல்லவா தெரிகிறது? இந்த நிலைமையில் யுத்தம் முடிந்துவிட்டால், அதைப் போன்ற விபத்து வேறில்லை'' என்று எழுதுகிறது.

லண்டன் ''டைம்ஸ்'' பத்திரிகையானது, ''அட்லாண்டிக் சாஸனத்தை அப்படியே அமுலுக்குக் கொண்டு வருவது சாத்தியமில்லை தான்; இருந்தாலும் அதை அடியோடு குப்பையில் தள்ள வேண்டியதில்லை!'' என்று எழுதுகிறது. அமெரிக்காவிலுள்ள பல பத்திரிகைகள் ''அட்லாண்டிக் சாஸனமானது அந்த மகா சமுத்திரத்தின் ஐந்து மைல் ஆழத்துக்குக் கீழே போய் விட்டது!'' என்று எழுதுகின்றன.

இதெல்லாம் இந்தியாவிலுள்ள நமக்கு ஏற்கெனவே தெரிந்த விஷயங்கள்தான். நாம் எதிர்பார்த்ததைக் காட்டிலும் இன்னும் முன்னாலேயே வெள்ளம் வெளியாகிறது என்பதைத் தவிர வேறு அதிசயம் ஒன்றுமில்லை. ஆனால், நமக்குத் தெரிந்திருக்கும் உண்மையை நாம் நன்கு பயன்படுத்திக் கொள்கிறோமா? அதற்கேற்ப நமது சுதந்திரப் போர் முறையை வகுத்திருக்கிறோமா? — அதுதான் இல்லை.

எதிரி சைனியம் வருகிறது என்பதைக் கேட்ட தஞ்சாவூர் மகாராஜா கோட்டைக்கு வெளியே துளசி ஜலத்தைத் தெளித்துவிட்டு வரச் சொன்னாரே, அதே மனோபாவத்துடன் தான் நாம் இன்னும் இருக்கிறோம். யுத்தம் முடிந்தவுடன் நமக்கு எப்படியோ, எந்த மந்திர சக்தியினாலோ, சுயராஜ்யம் வந்துவிடுமென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

யுத்தம் முடிவதற்குள்ளே நாம் இந்த நாட்டின் அரசாங்கத்தைக் கைப்பற்றியாக வேண்டும். அதற்குரிய காரிய சாத்தியமான வேலைத் திட்டங்களை வகுத்துக் காரியத்திலும் நிறைவேற்ற வேண்டும். அவ்விதம் செய்வதற்கு வேண்டிய தீர்க்க திருஷ்டியையும் காரியத் திறமையையும் கடவுள்தான் நமக்கு அளிக்க வேண்டும்.

கள்ளர்களும் திருடர்களுமே கடவுளின் துணையை நாடும்போது, நம்முடைய தேசம் நமது கைக்கு வர வேண்டுமென்று மட்டுமே கோரும் நாம் கடவுளின் துணையைத் தேடுவது தவறாகாதல்லவா?

# ஆகாச வெடி

''ஏராளமான கோவேறு கழுதைகளை நேசக் கட்சியினர் ஆகாய விமானத்தில் ஏற்றிக்கொண்டுபோய் பர்மா முனையில் தள்ளுகிறார்கள்.''

—தினசரி.

கிடக்கிறது கழுதை; தள்ளுங்கள்.



''யூகோ மன்னர் பீட்டருக்கும் கிரேக்க இளவரசி அலெக்ஸாண்டிரியாவுக்கும் நடக்கப் போகும் விவாகத்தின் போது பிரிட்டிஷ் மன்னர் ஜார்ஜும், கிரேக்க மன்னர் ஜார்ஜும் பிரசன்னமாயிருப்பார்கள்.''

—ஒரு செய்தி.

கல்யாணத்தின்போது பிரசன்னமாயிராமல், துக்கப்பட்டுக்கொண்டா இருப்பார்கள்!



''பால் விலையை ஒரு படி பன்னிரண்டணாவாக உயர்த்த வேண்டுமென்று வேலூர் பால் சப்ளைக் கூட்டுறவு சங்கம் தீர்மானித்திருக்கிறது.''— ஒரு செய்தி.

சென்னைப் பால்காரர்களை விட வேலூர் பால்காரர்கள் விலையைக் கூட்டி விற்பதில் ஒரு படி அதிகம் போய் விட்டார்கள் என்றே கூறவேண்டும்.



''நீலத்தநல்லூரில் ஒரு ஜதை காங்கயம் காளை மாடுகளுக்கு 10,000 ரூபாய் விலை சொல்கிறார்கள். யாரும் இது வரை வாங்கவில்லை''

—ஒரு செய்தி.

மாஜி வைஸராய் லின்லித்கோவுக்கு ஒரு தந்தி அடித்துப் பார்ப்பதுதானே?



''பால் கிடைக்காத கஷ்டத்தை முன்னிட்டுச் சீக்கிரமே பால் ரேஷன் செய்யப்படும் என்று ஒரு வதந்தி உலவுகிறது.''

—ஒரு செய்தி.



பால் ரேஷன் செய்யப்படும் பொழுது அதில் ஊற்றப்படும் தண்ணீரும் ரேஷன் செய்யப்படும் என்று நம்புகிறோம்.

# கள்ளனும் கடவுளும்

கள்ளர்கள், திருடர்கள், கொள்ளைக் காரர்களைப் பற்றிச் சில ரஸமான கதைகள் கேட்டிருக்கிறோம். ஒரு கள்ளன் கையில் கன்னக்கோலுடன் வெளியே கிளம்பும்போது, "கடவுளே! இன்று எனக்குச் சரியான வேட்டை கிடைத்தால், கிடைத்ததில் பாதியை உங்களுக்குத் தருகிறேன்!" என்று வேண்டிக் கொண்டான். அவனுடைய மனைவி, "ஐயையோ! கிடைத்ததில் பாதியைக் கொடுக்கிறதா? இப்படிக் கொடுத்தால் எந்தக் கள்ளன் குடித்தனம் தான் உருப்பட்டு வாழும்?" என்று கடிந்து கொண்டாள். அப்போது அந்தக் கள்ளன் தன் மனைவியின் அருகில் சென்று கண்ணைச் சிமிட்டிக் காதோடு சொன்னதாவது:— "அடி அசடே! வெறுமனேக் கோசரம் வேண்டிக் கொள்கிறது தானே! அப்புறம் கொடுக்காவிட்டால், கடவுள் என்ன போலீஸில் போய்ப் புகார் செய்யப் போகிறார்? அப்படி அவர் புகார் செய்தாலும் போலீஸார் கடவுளின் பேச்சை நம்பவா போகிறார்கள்? சும்மா இரு; அலட்டாதே!" என்றான்.

இன்னொரு திருடன் ஆடு திருடுவதற்காக இரவில் கிளம்பியபோது, "காளியம்மா! இன்றைக்கு எனக்கு நல்ல கொழுத்த ஆட்டுக்கடாக்கள் மூன்றாவது கிடைக்கிற பட்சத்தில், ஒரு முழு ஆட்டை உனக்கே கொடுத்து விடுகிறேன்!" என்று வேண்டிக் கொண்டானாம். "ஐயையோ! அப்புறம் எனக்கு ஒன்றும், உனக்கு ஒன்றும் தானே மிஞ்சும்? ஒரு முழு ஆட்டை யாராவது தூக்கிக் கொடுப்பார்களா?" என்று அவன் மனைவி கேட்டபோது, திருடன், "பைத்தியக்காரி! காளியம்மனுக்குக் கொடுத்தால், அம்மன் நிஜமாக விழுங்கி விடவா போகிறாள்? அம்மன் பெயரைச் சொல்லி நம் வயிற்றுக்குத் தானே போகப் போகிறது?" என்றானாம்.

மேனாட்டு இராஜ தந்திரிகள் ஜன நாயகம், சுயநிர்ணய சுதந்திரம், மனித சமூகத்தின் விடுதலை, அகில உலக சமாதானம் முதலியவற்றைப் பற்றிப் பேசுவதெல்லாம் மேற்படி கள்ளர் — திருடர் கதைகளைப் போலத்தான் என்பதை நாம் வெகுகாலமாக அறிந்திருக்கிறோம்.

முக்கியமாக, பெரிய மகா யுத்தங்கள் நடக்கும் காலங்களில் ஜன நாயகக் கடவுள், சுதந்திரத் தெய்வம், விடுதலை ஆண்டவன், சமாதான தேவதை முதலியவர்களுக்குக் கொண்டாட்டந் தான். அவர்களுக்கு வேண்டுதல்கள் ஓயாமல் செய்து கொள்ளப்படும். யுத்தம் முடிந்ததோ இல்லையோ, மேற்படி கடவுள் கூட்டமெல்லாம் ஓட்டம் எடுக்க வேண்டியது தான். நின்றால், அவர்களுக்கு என்ன ஆபத்து விளையுமென்று சொல்லமுடியாது.

இப்போது நடக்கிற மகா யுத்தத்திலும் மேற்படி தெய்வங்களுக்கு வேண்டுதல்கள் தாராளமாகச் செய்யப்பட்டு வந்தன என்பதை நாம் அறிவோம். அமெரிக்கா யுத்தத்தில் சேர்ந்ததும் இந்த வேண்டுதல்கள் அபரிமிதமாயின. நாலு வகைச் சுதந்திரம், ஐந்து வகைச் சுதந்திரம், ஏழுவகைச் சுதந்திரம் ஆகிய பலவகைச் சுதந்திரங்களைப் பற்றிப் பேச்சுக்கள் எழுந்தன; அட்லாண்டிக், பஸிபிக் சமுத்திரங்களில் மேற்படி சுதந்திர சாஸனங்கள் மிதந்தன.

இந்த மாதிரி பேச்சுக்கள் எல்லாம் யுத்தம் முடியும் வரையிலேதான் என்பதை நாம் அறிவோம். அப்புறம் சுதந்திரப் பேச்சுக்கள் ஆகாயத்தில் பறக்கும், விடுதலைச் சாஸனங்கள் தண்ணீரில் முழுகும், யுத்தத்தில் ஜயித்தவர்கள் 'எனக்கு உனக்கு' என்று கொள்ளையில் பங்கு போட்டுக் கொள்வதில் முனைந்து விடுவார்கள், அடிமை மக்களை விடுதலை செய்யும் விஷயம் யாருக்குமே ஞாபகமிராது என்பதெல்லாம் நமக்குத் தெரிந்த விஷயங்கள் தான்.

மேலே கூறிய உண்மைகளை நாம் மட்டுமல்ல, — மேனாட்டாரிலேயே சிலர் அறிந்து சொல்லியும் வந்தார்கள். உதாரணமாக, அமெரிக்காவில் அக்கிராசனர் ரூஸ்வெல்ட்டுடன் போட்டியிட்டவரான வெண்டல் வில்கி என்பவர் உலகத்தையெல்லாம் 41 நாளில் சுற்றிப் பார்த்து விட்டு வந்து எழுதிய "ஒரே உலகம்" என்ற புத்தகத்தில், "இந்த யுத்தம் நடந்து கொண்டிருக்கும் போதே ஐக்ய நாடுகளின் இராஜ தந்திரிகள் வருங்கால உலகத்தைப் பற்றி யோசித்துத் தீர்மானித்தால்தான்

தீர்மானித்தது; யுத்தம் முடிந்து விட்டால் அப்புறம் ஒற்றுமையான முடிவு ஒன்றுமே செய்ய முடியாது'' என்று எச்சரிக்கை செய்தார்.

மேற்படி வெண்டல் வில்கி முதலியவர்களின் பேச்சு அர்த்தமற்ற பேச்சு என்பது சமீப காலத்தில் வெளியாகி வருவதைக் காண்கிறோம்! அதாவது, ''யுத்தத்துக்குப் பிற்பாடு ஜயித்த நாடுகளுக்குள் சண்டையும் சச்சரவும் வந்துவிடும்; ஒற்றுமையாக ஒன்றும் செய்ய முடியாது'' என்றுதானே வெண்டல் வில்கி முதலியவர்கள் கூறினார்கள்? ''யுத்தத்துக்குப் பிறகு இல்லை, இப்பொழுதே அப்படித்தான்!'' என்று ஐக்ய நாட்டு இராஜதந்திரிகள் இப்போது நிரூபித்து வருகிறார்கள்!

இவ்விதம் உரியகாலத்துக்கு முன்னாலேயே 'குட்டு' உடைந்து வருவதற்குக் காரணம் அந்தப் பொல்லாத ஸ்டாலினைத் தலைவராய்க் கொண்ட ருஷியா தேசமே யாகும். ருஷிய சைனியங்கள் யாரும் எதிர்பாராத வண்ணம் வெகு அவசரமாக நாஸி சைனியங்களை முறியடித்துக்கொண்டும், வெற்றிமேல் வெற்றி அடைந்து கொண்டும் முன்னேறி வருகிறபடியால்,— கிட்டத்தட்ட ருமேனியாவின் எல்லைக்கு வந்துவிட்டபடியால், — முடிவான வெற்றியும் திடீரென்று ஒருவேளை கிடைத்துவிடுமோ என்ற எண்ணம் நேச நாடுகளில் தோன்றியிருக்கிறது. இதன் காரணமாக அபிப்பிராய பேதங்கள் இப்போதே வெளிப்படுவதுடன், ஜனநாயக சுதந்திரப் பேச்சுக்களைக் காற்றில் விடும் காரியமும் இதற்குள்ளாகவே ஆரம்பமாகி விட்டதைக் காண்கிறோம்.

சென்ற மார்ச்சு மாதத்தில் நிகழ்ந்திருக்கும் சில காரியங்கள் மேற்கூறிய உண்மையை நன்கு புலப்படுத்துகின்றன:—

1. இதாலியில் முஸோலினியைக் கைவிட்டுவந்த பொடாக்லியோ ஒரு அரசாங்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார். இவரையும் இவருடைய அரசாங்கத்தையும் எவ்வளவு தூரம் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று பிரிட்டிஷ் - அமெரிக்கர் முடிவு செய்யாமலிருக்கும்போது, ருஷிய சர்க்கார் திடீரென்று பொடாக்லியோ அரசாங்கத்தைத் தாங்கள் ஒப்புக்கொண்டு விட்டதாகத் தெரிவித்திருக்கிறார்கள்.

2. இத்தாலியின் கடற்படையில் ஒரு பகுதியை ருஷியாவுக்குக் கொடுக்கப்போகிறதாகப் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் ஒரு நாளைக்குத் திடீரென்று அறிக்கை விட்டார். மறுநாள் மிஸ்டர் சர்ச்சில் மென்று விழுங்கிக் கொண்டு ''அது இன்னும் முடிவாகவில்லை; ரூஸ்வெல்ட் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டார்'' என்று மூக்கால் அழுது ஓர் அறிக்கை விட்டார்.

3. போலந்தில் ஒரு பகுதியை ருஷியா தனக்குச் சொந்தமென்று கோருகிறபடியால், அந்தப் பகுதிக்கு நஷ்டஈடாக ஜெர்மனியில் ஒரு பகுதியைப் போலந்துக்குக் கொடுத்துவிடுகிறதென்று ஒரு பிரேரணை பெரிய இடங்களிலிருந்து உற்பத்தியாகி உலாவத் தொடங்கியது.

4. ஆஸ்திரேலியாவும் நியூஜிலாந்தும் சேர்ந்து செய்து கொண்டிருக்கும் ஓர் உடன்படிக்கை சமீபத்தில் வெளியாயிற்று. அந்த உடன்படிக்கையில் ஒரு ஷரத்து, பஸிபிக் சமுத்திரத்திலுள்ள எந்தப் பிரதேசத்தையும் தங்களுடைய சம்மதமின்றி யாருக்கும் கொடுத்துவிடக் கூடாது, கொடுத்தால் இருவரும் சேர்ந்து எதிர்க்கவேண்டும் என்று இருக்கிறதாம்.

ஒரு சோற்றைக் கொண்டு ஒரு பானைச் சோற்றைப் பதம் பார்க்கலாமென்றால், மேற்கூறிய நாலு உதாரணங்களிலிருந்து ஐக்ய நாடுகளின் யுத்த இலட்சியமும் கூட்டுறவும் எந்த நிலைமையி லிருக்கின்றன வென்று ஊகிக்கலாமல்லவா?

ஆம்; வெற்றி வந்துவிடலாமென்று தோன்றும்போதே, சுதந்திர ஜனநாயக இலட்சியங்கள் காற்றில் பறக்கின்றன. அந்தந்தப் பிரதேசத்து மக்களின் விருப்பத்தைக் கேளாமல் அவற்றை வேறு தேசங்களின் ஆதிக்கத்துக்கு மாற்றும் பேச்சுக்கள் நடக்கின்றன. வெற்றியடைந்த நாடுகள் உலகத்தைப் பங்கு போட்டுக் கொள்ளும் சண்டை அதற்குள்ளாகவே ஆரம்பமாகி விட்டதாகவே காணப்படுகிறது.

இந்த நிலைமையானது இங்கிலாந்திலும் அமெரிக்காவிலுமே பெரிதும் காரசாரமான விவாதங்களை உண்டாக்கியிருப்பதைக் காண்கிறோம். இங்கிலாந்தில் பிற்போக்குப் பத்திரிகை என்று பெயர் பெற்ற ''டெயிலி மெயில்'' பத்திரிகை, ''நாளைக்குத் திடீரென்று யுத்தம் முடிந்துவிட்டால், அதற்கு நாம் தயாராயிருக்கிறோமா? அப்படியிருப்பதாகத் தெரியவில்லையே?

-உம்மன்


குழந்தைகளா! உங்களுக்கு நோட்டும் பென்ஸிலும் வாங்கிக் கொடுப்பதிலேயே என் தாவு தீர்ந்துவிடுகிறதே!


"ஏன்னா! அடுத்தாத்து ஸரஸாவுக்குச் சித்திரையில் கல்யாணமாமே! நம்ம குழந்தைக்கு வரன் தேடாமல் இருக்கிறீர்களே."






உலகவாழ்க்கை இவ்வளவு துன்பமயமாக ஆகிவிடும் என்று சொப்பனத்திலும் நினைக்கவில்லையே!


இல்லே, இல்லே. வாழ்க்கை அப்படி அடியோடு மோசமாய்ப் போய்விடவில்லையே!....
?


தமிழர்களை மகிழ்விக்கக் "கல்கி" வாரப் பத்திரிகையாக வருகிறதல்லவா?


சந்தோஷச் செய்தி! "கல்கி" வாரப் பத்திரிகையாக வெளிவருகிறது!

# நிகழ்ச்சிச் சித்திரம்





















# கல்கி

மலர் 3 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 25


# என்ன சேதி?

## வளர்ச்சியும் வாழ்த்தும்

தமிழர் பத்திரிகையான "கல்கி"யை ஆரம்பித்த புதிதில், நமது மதிப்புக்குரிய ஒரு நண்பர், "கல்கி பிறந்து வளரவில்லை; வளர்ந்தே பிறந்து விட்டது!" என்று பெருமிதத்துடன் எழுதினார். ஆயினும் "கல்கி"யின் வளர்ச்சியில் இன்னும் எவ்வளவோ பாக்கியிருக்கிறது என்பதை நாம் உணர்ந்திருந்தோம். யுத்த நிலைமையை எண்ணிக் "கல்கி"யை வாரப் பத்திரிகையாக்க எத்தனை காலம் காத்திருக்க வேண்டியிருக்குமோ என்று கவலை கொண்டிருந்தோம். அந்தக் கவலையைப் போக்கி, "கல்கி" ஆரம்பமான முப்பத்து மூன்றும் மாதத்தில் அதை வாரப் பத்திரிகையாகக் கொண்டுவரத் துணை புரிந்த முருகப் பெருமானுடைய திருவருளையும் நேயர்களுடைய பேரபிமானத்தையும் வாழ்த்துகிறோம்.

வாரப் பத்திரிகை ஆகிவிட்டதினாலேயே "கல்கி" பூரண வளர்ச்சி பெற்றதாகாது என்பதை நாம் அறிந்திருக்கிறோம். அத்தகைய பூரண வளர்ச்சி அடைவதற்கு, காகிதப் பஞ்சமும், பத்திரிகைகள் இவ்வளவு பக்கந்தான் வெளியிடலாம் என்னும் சர்க்கார் கட்டுப்பாடும் நீங்கும் நற்காலத்தை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறோம்.

## மகா கவியின் திருவிழா

தமிழ் நாட்டின் தவப் பயனாகத் தோன்றிய கவிஞர்களுக்குள்ளே தலை சிறந்த மகாகவி கம்பர். அந்தக் கம்ப நாட்டாழ்வாருக்குச் சில காலமாகத் தமிழ் நாட்டில் பிரமாதமான அதிர்ஷ்டம் அடித்து வருகிறது. தமிழ் நாட்டின் பல இடங்களிலும் பங்குனி உத்திரத்தின் போது கம்பன் விழாவைக் கொண்டாடி வருகிறார்கள். இந்த வருஷம் கம்பரின் திருநட்சத்திரம் உச்சத்துக்கே வந்து விட்டதாகக் காண்கிறது. ஏனெனில், ஆந்திர சகோதரர்கள் தங்களுடைய நகரம் என்று பாத்தியதை கொண்டாடும் சென்னை மாநகரில், சேர்ந்தாற்போல் பத்து தினங்கள் அமோகமாகக் கம்பன் திருவிழாக் கொண்டாடப் போகிறார்கள். தினந்தோறும் பொதுக் கூட்டங்களும் பிரசங்கங்களும் நடப்பதோடு கூட, கம்பர் உருவப்படத்தை யானைமேல் வைத்து ஊர்வலம் விடப் போகிறார்கள். இப்படி எந்தெந்த விதங்களில் கம்பருக்குத் திருவிழாக் கொண்டாடினாலும் தகும்; அவசியந்தான் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இவ்வளவுடன் கம்பர் விழாக் கொண்டாடுவதற்கு இன்னொரு வழியையும் நாம் குறிப்பிடக் கூடும். கம்பரின் கவிதைக்கெனத் தம் வாணாளை அர்ப்பணம் செய்தவரான ஸ்ரீ டி. கே. சி. அவர்களின் கம்பராமாயணப் பதிப்பு — ஆரணிய காண்டம் — வெளியாகியிருக்கிறது. அதைப் படித்து அனுபவிப்பதன் மூலமாகவும் கம்பர் விழாவைத் திவ்யமாகக் கொண்டாடலாம்.

## உபசாரப் பத்திரம்

ஆந்திர சாம்ராஜ்ய இயக்கத்தின் தலைவராகத் தம்மைத் தாமே நியமித்துக் கொண்டிருக்கும் விஜயநகரம் குமார ராஜா ஸர் விஜயா அவர்களுக்குச் சென்னை நகர சபையார் உபசாரப் பத்திரம் ஒன்று வழங்கத் தீர்மானித்திருந்தார்கள். இந்தத் தீர்மானத்தை ஸர் விஜயா பாராட்டிவிட்டு, ஆனால் குறிப்பிட்ட தேதியில் தாம் சென்னைக்கு வர முடியவில்லை என்று தெரியப்படுத்தி விட்டாராம். இவ்விதம் வீணாய்ப் போகிற உபசாரப் பத்திரத்தைச் சென்னை நகர சபையார் தங்களுக்குத் தாங்களே படித்துக் கொடுத்துக் கொண்டு ஆனந்தப்படலாம் என்று யோசனை கூறுகிறோம்.

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழில் வெளியான "காரணம்" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: இ. சாந்தா பாய், பெரம்பூர், சென்னை.



பக்ஷிராஜா பிலிம்ஸ்

# ஜகதலப்ரதாபன்

சின்னப்பா

ஸரோஜினி · ஜீவரத்தினம் · வரலக்ஷ்மி.

ஸந்தானலக்ஷ்மி · கிருஷ்ணன் · மதுரம்

*Directed by* S.M. SRIRAMULU NAIDU

NARAYANAN

Pub M.Co.

JT28

புதிய

# கொலம்பியா
## ரிகார்டுகள்




சங்கீத வித்வான்

சித்தூர்

## சுப்ரமணிய பிள்ளை

பாடிய

இனிய தமிழ்ப்பாட்டுகள்

GE. 6124
உன்னைச்சரண் (காம்போஜி)
ஹரஹர (சுபாஷிணி)





## லலிதா வெங்கட்ராமன்

பாடிய

GE. 6133 — மதுரையம்பதிவாழ்
அரியதரமாமோ....



ஸ்ரீ

## சாயிபாபா

பாட்டுகள்

குமாரி

## மீனாக்ஷி

பாடிய

GE. 6074 — நாம் விரும்பும்
பவக்கடலை

G.H. RAO

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்,
S. கண்ணன் & கம்பெனி, திருச்சிறப்பள்ளி.